உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-49
துன்முகி-புரட்டாசி-5
20-9-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## பாலை

தலைவியை உடன்போக்கிற்கொண்டு செல்லுந் தலைவன் ஊர் தோன்றுவதைக் காட்டி விரைந்து வரும்படி ஆற்றிக் கூறியது.

பாம்பளைச் செறிய முழங்கி வலனேர்பு, வான்றளி பொழிந்த காண்பின் காலை, யணிகிளர் கலாவ மைதுவிரித் தியலு, மணிபுரை யெருத்தின் மஞ்ஞை போலநின், வீபெய் கூந்தல் வீசுவளி யுளர, வேகுதி மடந்தை யெல்லின்று பொழுதே, வேய்பயி லிறும்பிற் கோவலர் யாத்த, வாபூண் டெண்மணி யியம்பு, முதுக்காண் டோன்றுமெஞ் சிறுநல் லூரே 264

:-ஆவூர்க் காவிதிகள் சாதேவனார்

மடந்தாய்! கதிரவன் மேற்றிசையில் மறைய இன்று பொழுது சாய்ந்தது. மூங்கில் நிறைந்த சிறிய மலையிலே கோவலராற் கட்டப்பட்ட தெளிந்த ஓசையையுடைய மணிகள் ஒலிக்கின்ற எமது சிறிய நல்ல ஊர் காணப்பெறுகின்றது, உங்கே காண்பாயாக! பாம்பு அளையினுள்ளே செறிந்திருக்கும்படி முழங்கி வலமாக எழுந்து மேகம் மழைபொழிந்த காட்சியையுடைய காலைப் பொழுதில் அழகு விளங்கிய தோகையை வியப்புண்டாகும்படி விரித்தாடுகின்ற நீலமணியையொத்த பிடரியையுடைய மயிலைப்போல் பூச்சூடிய நினது கூந்தலில் வீசுகின்ற காற்று உளரும்படி விரைந்து வருவாயாக.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

அன்னியனிவ் வுடம்புதனக் கழிவிலன்சிற் றறிவாளன்
பின்னமல மோடுபுணர்வோன் பெரியவியா பகனசடன்
துன்னுறுதன் வினைநுகர்வோன் சொல்லியவவ் வினைமுதல்வன்
தன்னைநிகர் வுறுமிறைவன் தனையுடையன் பசுவென்பான்.

:-சதமணிமாலை20

உரை:- 'பசு என்பான்- பாசத்தை உடைய ஆன்மா என்று சொல்லப் பெறுபவன், இவ்வுடம்புதனக்கு அன்னியன்— இந்த உடம்பிலிருந்து வேறுபட்டவனும், அழிவிலன் - என்றும் அழியாதவனும், சிற்றறிவாளன்-சிறிய அறிவையுடையவனும், பின்னமலமொடு - தன்னின் வேறுபட்ட மலத்தோடு புணர்வோன் -சேர்ந்திருப்பவனும், பெரியவியாபகன்—பெரியதாகிய நிறைவையுடையவனும், துன்னுறு - வந்து பொருந்துகின்ற, வினை நுகர்வோன்-வினையை நுகர்பவனும், சொல்லிய அவ் வினை முதல்வன் சொல்லப்பெற்ற அவ்வினையை ஊட்டும் முதல்வனாகிய, தன்னை நிகர்வுறு மிறைவன் தனை-தனக்குத்தானே ஒப்பாகிய ஆண்டவனை, உடையன் - தலைவனாக உடையவனுமாவான்' என்பதாகும்.

நவம்பழுத்த தமிழ்நூல்கள் பலவற்றை நல்கிய சிவப்பிரகாச முனிவர், சிவாகமக்கருத்துக்கள் விளங்கச் செய்தருளிய நூல் 'சதமணிமாலை' என்பது. மணியனைய நூறு செய்யுட்களைக் கொண்டு இந்நூல் இயலுவதால் இது சதமணிமாலை என்னும் பெயரைப் பெற்றது.

பதி, பசு, பாச உண்மை- இயல்பு ஆதியவற்றையும்தீட்சை சிவப்பேறு முதலியவற்றையும் சிவாகமங்களிலிருந்து திரட்டியெடுத்த கருத்துக்களால் ஆசிரியர் இந்நூலில் விளங்க வைத்

துள்ளார். இதில் சுவாயம்புவ ஆகமம், கிரணாகமம் ஆகிய இரண்டு மூலாகமங்களிலிருந்தும், மிருகேந்திரம், பாதாக்கியம், மதங்கம், விசுவசாரோத்திரம், சருவஞானோத்திரம், நிசுவாசகாரிகை, சாலோத்திரம், தேவியாமளம், விசுவாசகாரிகை, தேவிகாலோத்திரம் என்னும் பத்து உபாகமங்களிலிருந்தும் கருத்துக்கள் எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளன.

'நவையொரு சிறிதுமில் ஞான தீக்கைக, ளவைவள மொருங்கிய அறிஞர் கேண்மினோ' என, இந்நூற் பாயிரம், நூல் கேட்கும் அதிகாரிகளை அறிவிக்கின்றது. 'தீட்சையாலன்றிச் சிவத்துவ விளக்கம் பெறுதல் வேறு எவ்வாற்றானுமில்லை' என்பது சைவ நூல் முடிபு. இதனை இந் நூலிலேயே 'தத்துவத்தின் தலைப்படுகின்றவ, னெத்திறத்த தருமமிசையினுஞ், சித்த நற்சிவ தீக்கையி னலலான், மெய்த்து கட்டு விடுப்பது வேறிலை' என்று சருவஞானோத்திர ஆகமப் பொருளாக ஆசிரியர் கூறுவார். சிவாகமத்தின் பிழிவாகவுள்ள இந்நூலை ஞான தீக்கைகளைப் பெற்று, அவற்றின்வழி ஒழுகுகின்றவர்கள் மட்டுந்தான் உணர்ந்து கொள்ள முடியுமாதலின், தீட்சையால் மனமொருங்கிய அறிஞர்களைக் கேட்கும்படி பாயிரம் கூறியது.

ஒவ்வொரு நூலையும், கேட்கத் தக்க அதிகாரிகளே கேட்க வேண்டும். அவ்வாறின்றி யாரும் எந்த நூலையும் கேட்கலாமென்ற மாறுபட்டம், நாட்டிற் புதுந்து நடை முறையி லிருப்பதனால், விளைந்து கொண்டிருக்கின்ற கேடுகள் மிகப்பல. வள்ளுவர் பெருமான் 'கற்கக் கசடற கற்பவை' என்று கூறியிருப்பதில் 'கற்பவை' என்பதற்குக் 'கற்கத் தக்கவை' என்று நூலின் தகுதி பற்றிப் பொருள் செய்வதோடு கற்பவன் தகுதிபற்றியும் பொருள் செய்ய வேண்டுவது மிகமிக இன்றியமையாததாகும்.

சிவாகமக் கருத்துக்களைக் கலையறிவு கொண்டு மட்டும் புரிந்து கொள்வதென்பது முடியாததொன்றாகும். மும்மலத்தொடர்பு அநாதியாகவே இல்லாதவனாயிருக்கின்ற ஆண்டவனது உண்மையியல்புகளை, அம்மும்மலங்களுள் ஒன்றாகிய மாயையின் காரியமான கலைநூற் புலமையால் ஒருபோதும் அளவிடவே முடியாது. இதனாலேயே கலையறிவால் வருகின்ற ஞானத்தை அபரஞானமென்று சொல்லி

அது, பரஞானத்திற்கு அடிப்படையாயிருந்து உதவுமென்று ஆன்றோர் கூறினர். பரஞானமென்பது திருவருளுணர்வு.

அபரஞான பரஞானங்களை இவ்வாசிரியர் இந்நூலில் 'இயம்பிய ஞானமோ ரிருவகைப்படும், பயன்றரு மபரமும் பரமு மென்னவே, நயந்தரு கலைகளே யபரஞானமா, முயர்ந்திடு பரஞ் சோலி னுணர்வென் றோதுவார்' என்று சுவாயம்புவ ஆகமப் பொருளாக விளக்குவார். பரஞானமாகிய திருவருளுணர்வொன்றே சிவத்துவ விளக்கம் செய்யும் இயல்புடையதாதலின் அப்பரஞானத்தை நல்குவதாகிய சிவதீட்சையைப் பெற்றவர்களே சிவாகமமாதிய சைவநூல்களைக் கற்கத்தக்க அதிகாரிகள் ஆவார்களென்று பெரியோர் பணித்தனர்.

அறிவுக்கு வருவன அனைத்தும் உணர்வுக்கும் வருவனதாமென்று சொல்லிவிட முடியாது. அநுபவத்திற்கு வருகிற எல்லாம் உணர்வோடு ஒட்டிகிற்பனவே என்பதை எடுத்துச் சொல்ல வேண்டுவதில்லை. நம்மோடு ஒன்றாயும், வேறாயும், உடனாயும் இருக்கின்ற ஆண்டவனை அறிவுகொண்டு தேடினால் ஒருநாளும் காணமுடியாது. அவனைக்காணுதற்கு அநுபவமே கருவியாயிருந்துதவும். அவ்வநுபவம் திருவருளுணர்வால் நிகழுவது. 'காட்டுந் திருவருளே கண்ணாகக் கண்டுபர, வீட்டின்ப மெய்ப்பொருளை மேவுநா ளெந்நாளோ' என்ற தாயுமானஅடிகள் திருவாக்கு இங்கே நினைவுகூரத் தக்கதாகும்.

திருவருளுணர்வு, தீட்சை பெற்று அவ்வழியில் ஒழுகுபவர்களுக்கு எளிதில் கைகூடுவதாதலின், அவர்களால் ஆண்டவனை அறியவும் உணர்த்தவும் முடியும். அதனாலேயே சாதனங்களை வரப்பெற்றுப் பயனடைந்த சான்றோரைச் சீவன்முத்தர் என்று சைவநூல்கள் பாராட்டுகின்றன.

திருவருளுணர்வைப் பதிஞானமென்று சாத்திரம் சொல்லும். உலகத்தை யறியும் அறிவு பாசஞானமென்றும், அவ்வுலகத்திற்கு வேறாயுள்ள உயிரை அறியும் அறிவு பசுஞானமென்றும அதனின் வேறாயுள்ள கடவுளை அறியும் அறிவு பதிஞானமென்றும் சொல்லப்பெறும். சித்தும் சடமுமாகிய உலகத்தில் சடப்பொருளைக் கழித்துவிட்டு, எஞ்சியிருக்கிற

சித்துப் பொருளாகிய உயிரே கடவுளென்றுசொல்லிக்கொண்டு அதற்குமேல எட்டிப்பார்க்காது இடர்ப்படுகின்ற சமயத்தவரும் இங்கேயிருக்கிருர்கள்-

உயிருண்மையை ஒப்புக்கொள்ளுகின்ற அவர்கள், அவ்வுயிரியல்பை ஒழுங்காக அறியாமையினுலேயே உயிரும், இறைவனும் ஒன்றென்ற ஒவ்வாத முடிவை உறுதிப்படுத்த முயலுகிருர்கள். உண்மையான உயிரியல்பு இன்னதென அறிந்துகொள்ளுதற்கு மிருகேந்திர ஆகமப்பொருளாக மேற்கண்ட பாடலை ஆசிரியர் அமைத்து வழங்கியுள்ளார்.

உயிருக்கு வடமொழியில் ஆன்மா, பசு முதலிய பலபெயர்களுண்டு. அவற்றுள் பசு என்ற சொல்லுக்குப் பாசத்தோடு கூடியது என்பது பொருள். இதனைப் 'பசுத்துவ முடையனுகிப் பசுவென நிற்கு மான்மா' என்று சிவஞான சித்தியார் விளக்குகின்றது. 'அன்னியன் இவ்வுடம்புதனக்கு' என்பது 'உயிரெனப் படுவதிந்த வுடலின்வேறுளதாய்' என்ற சிவஞான சித்தியாரை நினைவூட்டுகின்றது. உடம்பே உயிரென்றும் உடம்பழிந்தால் உயிரும்அழிந்துவிடுமென்றும் கூறுஞ் சமயவாதிகளும் உள்ளனராதலின், உடம்பிற்கு வேருக உயிருண்டென்று உரைத்தார்.

உயிர்களின் இச்சா ஞானக்கிரியைகள் என்றும் கெடாது நித்தமாயிருப்பவை. ஆதலின் உயிரும் அழிவற்ற பொருள். ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பொறியால் அறிதலாலும், அறிந்தவற்றை மீள மறத்தலாலும் அறிகின்ற தன்னை அறியாமையாலும், பிறர் அறிவிக்கவே அறிதலாலும் சிற்றறிவுடையது உயிரென்று கூறப்பெற்றது.

இச்சாஞானக்கிரியைகளை அநாதியே மறைத்து நிற்கும் ஆணவமல சம்பந்தம் உயிருக்கு உண்டு. அவ்வியிர் எது எதைச் சார்ந்திருக்கின்றதோ; அதன தன் இயல்பே தன்னியல்பாய் நின்றறிவதாகி அதனதனில் வியாபித்து நிற்பதாதலின் பெரியவியாபகனென்றுர். கன்ம, மாயா, மலச்சார்புடைமை, அசடனுகவைத்தது

'புண்ணியங்கள் பாவ,மாக்கியும் பலன்களெல்லா மருந்தியு நிற்கு மான்மா' என்பதால் தன்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சமஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

'ஆஸ்திகர்கள் துன்பங்களையெல்லாம் ஆண்டவன் துடைப்பார் என்கிறார்கள். நாஸ்திகர்களோ யார் துன்பப்படுகிறார்களோ அவர்களே சமாளித்துக் கொள்ளட்டும் என்று கூறுகிறார்கள் இவர்கள் இருவருமே தமக்குக் கொஞ்சம் பொறுப்பு இருக்கிறதென்பதை உணருவதில்லை' (5-7-56 தினமணி) என்ற அவர் கூற்றுக் காண்க. அவர் நியாயம் பேசுகிறவராயின் நாஸ்திகரின் உலுத்தத்தன்மையைப் போக்க ஏதேனுமொரு யோசனையை அவராற் கூற முடியுமானால் அந்த யோசனையையே அவர் ஆஸ்திகருக்குங் கூறவேண்டும். ஆனால் ஆண்டவனுடைய பெயரைக்கூடத் துதிக்கவேண்டாமென அவர் யோசனை கூறுவதேன்? அப்படிக்கூறுவதால் அவரெழுதிய கிதைப் பேருரை அவராலேயே கண்டிக்கப்பட்டதாகிறது. எப்படி? மனிதன் சேவை செய்க, ஆனால் அதன் பலனைத் தெய்வார்ப்பணம் பண்ணிவிடுகஎன்பது அவ்வுரை முடிவு. கடவுளை நினையாமல் அவ்வர்ப்பணம் முடியாது. அவன் அர்ப்பியாமல் அவரும் ஏற்றுக்கொள்ளார். மேலே காட்டியவசனப்படி கடவுளை நினையாமல் துதியாமல் சேவைசெய்கிற ஒருவன் அச்சேவையின் பலனை யாருக்கு எப்படி அர்ப்பிப்பான்? சேவையேபோதும், பலனின் அர்ப்பணம் வேண்டாம் என்னலாமா? ஆமெனின் அச்சேவை அதிர்ஷ்டமாகி அச்சேவகனையே பற்றும் அவன் பிறவிப்பெருங்கடல் நீந்தான். ஆகலின் அவனை அவ்வர்ப்பணமொன்றே கரைசேர்க்கவல்லது- அது தெய்வ விசுவாசமின்றிக் கூடாது- அவ்விசுவாசமுள்ளவன் தெய்வத்தைத் துதிக்கவே செய்வான், துதிக்கவும் வேண்டும். துதியாமல் விசுவாசத்தளவில் நிற்பவனும் நாஸ்திகனே. அவனுக்குத்

தெய்வமிருப்பதும் இல்லாதொழிவதும் ஒன்றே. விநோபா உண்மையை மறைத்து நாஸ்திகம் பேசுகிறார்.

எல்லாச் சீவராசிகளுமே தம் குட்டி குஞ்சுகளிடம் அன்பு அன்பு காட்டுகின்றன. அந்த அன்பு போது. ஆனால் சில சீவராசிகள் தம் இனத்தின்பாலும் அன்பு செய்கின்றன. மற்றுஞ் சில சீவராசிகள் தம் இனத்தின்பால் அன்பும் வன்புமின்றிச் சிதறி வாழ்கின்றன. வேறுசில சீவராசிகள் தம் இனத்தின்பால் வன்பே காட்டுகின்றன. மனிதர் அம்மூன்று ராசிகளுள் எதைச் சேர்ந்தவர்? அவர் கூடி வாழ்கின்றனர். அஃதன்பின்றி யியலாது. அந்த அன்பு அவருக்கு இடையில் வந்ததன்று. ஆகலின் அவரது பிறப்பின் இயற்கையே அது. இன்றேல் அவர் அங்ஙனம் வாழார். அக்குணங் கெட்டவருஞ் சிலரோ பலரோ இருக்கலாம். அதனால் அக்குணம் அப்பிறப்பின் இயற்கையன்றென்று சொல்லிவிட முடியாது. ஆகலின் நாஸ்திகருட் சிலரிடமும் அக்குணம் முனைத்து நிற்றல் கூடும். அதுகொண்டு அவர் மதிக்கப்படார். தீச்சுடுவதாலும் நீர் குளிர்வதாலும் மதிப்பிற்குரியவாகுமா? ஆகவே மனிதர் அன்புகொண்டு சேவை செய்து பலனைச் சிவார்ப்பணம் பண்ணுகிறது முடிய அவருடைய ஒழுகலாறு இருக்கவேண்டும். தெய்வ நம்பிக்கையோடு கூடாத அன்புடைமைகளால் மாத்திரம் மனிதராசி மேம்பட்டிடாது.

ஆத்திகர் கடவுளுண்டென்று கொள்ளுமளவில் நில்லாமல் அவரை வணங்கித் துதிக்கவுஞ் செய்வர். நாத்திகர் கடவுளில்லையெனச் சொல்லுவதோடமையாமல் அவரையும் ஆஸ்திகரையும் இழித்துக்கூறி ஏசித்திரிவர். ஒருவன் மதித்துத் தொழுகிற கடவுளை இன்னொருவன் ஏசித்திரிவானாயின் அது அவ்வணங்குபவனது மானத்தையே வாங்குவதாகும். நல்லவனாகிய மூத்த மகன் தாயைத் தொழுகிறான். அவன் தம்பி பரம துஷ்டன். தனக்குந் தாய்தான் அவள், அவ்வுரிமைபற்றி அவளிடம் தான் எப்படியும் நடந்துகொள்ளலாம். தன் நடை அவளுக்குப் பிடிக்கவில்லையானால் அவள் சாமர்த்தியத்தால் அவள்தான் தற்காப்புச் செய்துகொள்ளவேண்டும் என அவன் பிதற்றி அவளிடந் தகாத சேட்டைகள் புரிய முயல்கிறான்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி புரட்டாசி-5

# ஆலயச்சொத்தும் அமைச்சர்களும்.

ஆலயங்களில் ஆண்டவனுக்கு நாள் வழிபாடு சிறப்பு வழிபாடுகள் முறையாக நிகழ்ந்து வந்தாற்றான் அரசும் குடிகளும் தீங்கின்றிச் செழித்து வாழும் என்று கண்டு, நடைமுறையில் ஒழுகி வந்த நாடு நம் நாடு. தோன்றுதோட்டுக் கடவுளுக்கு அஞ்சி, எல்லாம் அவரது உடைமைகள் என்பதைஉணர்ந்து அவருக்குப் பிரதிநிதிகள் என்ற முறையிலேயே நம்நாட்டு மன்னர்கள் அரசுபுரிந்து வந்திருக்கிறார்கள்.

அரசாங்க உடைமைகளைத் தம்மவை என்று கருதுகின்ற மனப்பான்மை பண்டை மன்னர்களுக்கு இருந்ததில்லை. இதனை அன்னியராட்சி நம்நாட்டிலிருந்து அகன்ற காலம்வரை. தனியரசுகளாக இருந்த திருவாங்கூர் - புதுக்கோட்டை முதலிய சிற்றரசர்களின் ஆட்சிமுறையை அறிந்தார் அறிவர்

இவர்களை முறையே பத்மநாப தாசர், பிரகதம்பா தாசர் என்று அழைத்ததும், இவ்வரசுகளின் நாணயங்களிலும் பிறவற்றிலும் சங்கு-அம்பாள் போன்ற திருவுருவங்கள் பொறிக்கப் பெற்றிருந்ததும் இங்கே நினைவுகூரத்தக்கனவாம்.

ஆண்டவனுல் அளிக்கப்பெற்ற அவனது உடைமைகளை ஆளும் அரசுரிமையை முன்னை நல்வினைப் பயனுல் பெற்ேறும்' என்ற உணர்ச்சி முன்னை மன்னர்களுக்கு இருந்த படியினுலேயே அவர்கள் காலத்தில் ஆண்டவனிருக்கும் ஆலயங்கள் கண்ணுங் கருத்துமாய்க் கண்காணிக்கப் பெற்று வந்தன. ஆளுந்தலைவர்கள் கடவுளுணர்ச்சி குறையாமல் இருந்துவந்தபடியால் நாடு, நாடா வளத்ததாகச் செழிப்புற்றிருந்தது

அரசியலில் செலுத்த வேண்டிய நீதிமுறையில் உண்மைகாண முடியாது ஐயப்பாடு நிகழ்ந்தபோழுது களிலெல்லாம் பண்டை மன்னர்கள், ஆண்டவனை வேண்டியே உண்மையை உணர்ந்து ஒழுகினுர்களென்று வரலாற்று நூல்கள் ச ுகின்றன. இவ்வாறு கடவு ,யே கதியென நம்பி வாழ்ந்த ம்நாட்டில், கடவுளில்லை என்னும் கட்சியும் கடவுளிருந்தால் நமக்கென்ன என்னும் கட்சியும் கடவுளிருப்பதை ஒத்துக்கோண் ாலும் அவரை ஏமாற்றக் கங்கணம் கட்டிக்கோண்டு புறத்தில் ஆத்திகத்தையும் அகத்தில் நாத்திகத்தையும் கைக்கோண்டிருக்கிற கட்சியும் அரசியற் செல்வாக்கில் பங்கு பெற்றுவிட்டதால் நாளுக்கு நாள் நமக்கு வந்துகோண்டிருக்கிற துன்பங்கள் அளவிட முடியாது ஆகிவிட்டன.

சென்னை மாநிலத்திலுள்ள நம் கோயில்களில் சோத்துள்ளவைமட்டும் நமது கனந்தங்கிய அமைச்சர்களின் கண்களைக் கரிக்க வைத்து அவற்றின் சோத்துக்களைப் பிற துறைகளில் சேலவிடுதற்குப் புதுச் சட்டங்கள் கோண்டுவர வேண்டுமேன்று போதுக் கூட்டங்களில் அடிக்கடி சோல்லும்படி செய்து விட்டன. இந்தவேளையில் கீழ்க் கண்ட திருமந்திரத்தை நினைவூட்டிச் செய்தக்க செய்யும்படி அமைச்சர்களை வேண்டிக் கோள்ளுகிறேம். 'முன்னவனுர் கோயிற் பூசைகள் முட்டிடின், மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும் கன்னங் களவு மிகுத்திடுங் காசி-னிக், கேன்னரு நந்தி யெடுத்து-ரைத் தானே'

# பழம் பாடல்கள்

இவை கோவை, செக்கவிமணி திருமுறைஞானபாநு, C. K. சுப்பிரமணிய முதலியாரவர்களின் தந்தையார் திரு. கந்தசாமி முதலியாரவர்கள் வைத்திருந்த பழய ஏட்டுச் சுவடிகளில் இருந்து எடுத்து எழுதப்பெற்று, செக்கவிமணி அவர்களால் அனுப்பப் பெற்றவை. பாடல்களின் ஆசிரியர் பெயர் புலப்படவில்லை.

:-ஆசிரியர்

திருச்சிற்றம்பலம்

'தையல்பாகத் துடனமர்ந்துஞ் சடைமேற் சலமான் றனைத் தரித்தும், கையிற் பலியேற் றிரிந்துழலுங் கள்வ னுகந்த விடம் வினவி, லெய்யுங் கான ரின்புனத்தி லே ன ங் கரிமா னினஞ் சேரும், வையம் புகழும் பேரூர்வாழ் மணியே பிறவா நெறியானே' (1)

''வானற் கரியான் கலையாளி மறைநான் குடைய பொருளாளன், மோனத் தவர்க ளடி-பணியு முதல்வ னுகந்த விடம்-வினவிற், றே ன ற் கொம்பிற் கனிந்தொழுகித் தேமாங் கனி-கள் பலவுதிருங், கானப் பேரூர் தனில்வாழுங் கனியே பிறவா நெறியானே. (2)

'கரமேன் மழுமான் றனையேந்-திக் கா லி ற் சி ல ம் பு தனை யணிந்து, புரமூன் றெ ரி த் த வருளாளன் புனித னு க ந் த விடம்வினவின், மரமேற் கவியி னினமாட வருக்கைக் கனிகள் பலவுதிருந், தி ர ம ா ம் பேரூர் தனில்வாழுஞ் செல்வா பிறவா நெறியானே. (3)

'வேழ முரித்து மிகப்போர்த்து மேனி முழுது நீ ற ணி ந் து, தாழுஞ் சடையா னருளாளன் சைவ னுகந்த விடம்வினவி, ஞாழற் குருந்து சண்பகமே னனி-வண் டி ன ங் க ளிசைமுரல, வாழப் புடைசூழ் பேரூர்வாழ் மணியே பிறவா நெறியானே(4)

'நீர்வெண் பிறைசெஞ் சடை-தோன்ற நெடுமா லயனடி முடி-காணப், பா ர் வெ ன் றண்ண லமர்ந்தருளும் பண்ப னு க ந் த விடம்வினவில். கார்வெண் முகி-லின் திரன்வானோர் கனக மலர்-கள் பொழிந்தார்ப்பப், பே ர ம் பதியிற் பட்டியினுட் பி ற வா நெறியெம் பிஞ்ஞகனே. (5)

'நாதன் மலேமா மகள்பங்கன் நதிவெண் பிறைசெஞ் சடை தோன்றப், பூதஞ் சூழச் சுடலே-யினுட் புகுந்தா னுகந்த விடம்-வினவில், பாதம் புரிமா முனி -வோர்கள் பரவி மகிழ்ந்து பணிந்தேத்த,வேதப் பொருளே பேரூர்வாழ் விமலா பிறவா நெறியானே- (6)

'வட்டச் சடையின் மதி தோன்ற வரித்தோ லெனவு மிகச்சாற்றி, நட்டம் பயிலு முமைதேவர் நண்ப னுகந்த விடம்வினவில்,அட்டத் திசைமா முனிபாலர் அலரார் மலருங் கொண்டேத்தப், பட்டிப் பேரூர் தனில்வாழும் பரனே பிறவா நெறியரனே' (7)

திருச்சிற்றம்பலம்

## சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார் காலமானர்

சென்னே செப் 15—

திரு சி எஸ் இரத்தினசபா பதிமுதலியார் மாரடைப்பினல் இன்றிரவு இங்கு காலமானர். இவருக்கு வயது 75.

திரு முதலியார் கோவையைச் சேர்ந்த பெரிய தொழில் அதிபர் சென்னே மாகாண அரசியலில் முக்கியப் பங்கு கொண்டவர்.

கோவையில் ஆர் எஸ் புரம் என்று அழைக்கப்படும் பகுதி இவர் செய்துள்ள சேவைகளேப் பாராட்டும் முறையில் இவரது பெயரால் வழங்கப் படுகிறது. இவருக்கு 5குமாரர்களும், 4குமாரத்திகளும் மனேவியும் உள்ளனர்.

---

## இலக்குமிபுரம்

சொக்கலிங்க வித்தியாசாலே யில் தேசீயகவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் விழா 11-9-56மாலே தலேமை ஆசிரியர் திரு ஜி சுவாமி நாதய்யரவர்கள் தலேமையில் கொண்டாடப்பெற்றது. இறை வணக்கத்திற்குப்பின் பாரதி வரலாறுபற்றித் தலேவரவர்களும் மாணவ மாணவிகளும் பேசினர். கும்மி கோலாட்டங்கள் நடைபெற்றன. தலேவர் முடிவுரைக்குப்பின் மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டம் நல்கி நாட்டு வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது

---

(5ம் பக்கத் தொடர்ச்சி)

னுறு தன்வினை நுகர்வோ னென்பது விளங்கும். செய்த வினை செய்தவன்பால்தானே வந்து பயன்தரும் என்றுரைக் கும் பேதைமையுடையாரை நினைந்தே, வினையை ஊட்டுப வன் இறைவன் என்பது பெற வைத்தார்.

அவ்விறைவனே ஆண்டவ னென்பதும், உயிர்கள் அவனது அடிமைகளே என்பதும் உணர்த்த 'இறைவன் தனை யுடையன்' என்று கூறினார். இங்கே 'தமையுடைய தன் உணர்வார்' என்ற சிவஞான போதம் நினைவுகொள்ளத் தக்க தாகும். இரண்டாவது வரியி லுள்ள 'பின்னமல மொடு புணர் வோன்' என்பது, பின் அமல மொடு புணர்வோன் எனப் பிரிந்து, சுத்தாவத்தையில் சிவம் சிவமாக உயிர் உயிராகவே நிற் கும் அத்துவிதமுத்தி சித்திக்கு மென்பதைப் புலப்படுத்திக் கொண்டிருக்கிற நயம் அறிந்து மகிழுதற்குரியதாம்.

## உங்களுக்குத் தெரியுமா?

1955-56ம் ஆண்டில் உல்லா சப் பிரயாணிகள் போக்கு வரத் தின்மூலம், இந்தியாவுக்கு அந் நிய நாணயச் செலாவணியாக மொத்தம் 10 கோடி ரூபாய் கிடைத்தது.

இந்திய ரயில்வேக்கள் 1955-56ம் ஆண்டில் மொத்தம் 76.86 லட்சம்ரூபாய்க்குக்கதர்த் துணி வாங்கின; அதற்கு முந் திய வருஷத்தில் அவை வாங் கிய 'கதர்த்துணி'யின் மொத்த மதிப்பு 10.13 லட்சம் ரூபாய் தான்.

'மலேரியா' வியாதி ஒழிப்பு நடவடிக்கைகளுக்காக இந்திய சர்க்கார் உபகரணங்கள் வகையி லும் இதரவகையிலும் 13 ராஜ்யங்களுக்கு இதுவரை மொத்தம் சுமார் 24.57 லட்சம் ரூபாய் மான்ய உதவியாக வழங்கியிருக்கின்றனர்.

பூவேலைப்பாடுகள் உள்ள துணிகளின் உற்பத்தித் தொழி லுக்குப் புத்துயிர் அளிப்பதற் காக, அகில இந்திய கைவேலைப் பொருள்கள் போர்டு, சூரத்தில் முன்னோட்ட நிலையமொன்றை ஏற்படுத்தியிருக்கிறது. இந்தத் திட்டத்துக்காக 1956 ஜூலை மாத இறுதிவரை மொத்தம் 40,000ரூபாய்க்குமேல் செலவி ட்ப்பட்டிருக்கிறது.

## திரு-கொச்சி தமிழகம்

திருவனந்தபுரம் செப் 17–

மாகாணப் புனரமைப்பின் போது திரு-கொச்சி மாகாணத்திலிருந்து சென்னை மாகாணத்திற்கு மாற்றப்படும் பகுதிகள் பற்றிய சிக்கல்களைக் கவனிக்க திரு ஆர் திருமலையை விசேட அதிகாரியாக சென்னை அரசாங்கம் நியமனம் செய்துள்ளது.

கலெக்டர் தகுதியுடன் நாகர் கோவிலில் தலைமை அலுவலகத்தைக் கடந்த 15ம்தேதியன்று இந்த அதிகாரி நிறுவிக் கொண்டுள்ளார்.

திரு-கொச்சியிலிருந்து சென்னையுடன் சேர இருக்கும் பகுதிகள் கன்னியாகுமரி மாவட்டம் என்ற பெயரில் தனி மாவட்டமாக அமைக்கப்படும்.

இப்போது விசேட அலுவல் அதிகாரியாக நியமனம் ஆகியுள்ள திரு திருமலை கன்னியாகுமரிமாவட்டம் உருவாகும் போது அதன் கலெக்டராக ஆவார்.

---

## மரணவரிச் சட்டம் அமுல்

தஞ்சாவூர் செப் 18–

மரண வரிச் சட்டத்தின்கீழ் வருகிற சொத்துக்களின் மதிப்பை நிர்ணயிக்கும்அதிகாரியாகச் சென்னை மாகாணத்திற்கு திரு டி உலகநாததஞ்சிராயரை இந்திய அரசாங்கம் நியமித்திருக்கிறது. மூன்றுண்டு காலம் இப்பதவியை இவர் வகிப்பார்.

---

## புதியஒரு ரூபாய் நோட்டுகள்

புதுடில்லி செப் 18-

புதிய ஒருரூபாய் நோட்டுகளை அரசாங்கம் கூடிய விரையில் வெளியிடும் என்று நிதி அமைச்சர் துறை இன்று வெளியிட்ட பத்திரிகைக் குறிப்புக் கூறுகிறது.

நோட்டின் அமைப்பில் மாறுதல் இருக்காது. நோட்டில் எண்ணுக்குக் கடைசியில் A என்ற எழுத்துப் பொறிக்கப்படும். இது கருஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும்-

# ஜனதிபதிப் பதவி

(முன்தொடர்ச்சி)

தியடோர் ரூஸ்வெல்ட் நியூயார்க்கிலும் வில்லியம் ஹவார்டு டாப்ட் ஸின்ஸினாட்டிலும் ஆக இரண்டு அமெரிக்க ஜனாதிபதிகள்தான் பெரும் நகரங்களில் பிறந்தவர்கள். மற்றவர்கள் சிறு நகரங்களிலும், பண்ணைகளிலும் அல்லது எல்லைக் காடுகளிலும்தான் பிறந்தனர்.

ஆன்ட்ரூ ஜாக்ஸன் என்பவர் பிறந்த இடம் ஒரு எல்லை முகமாக இருந்தது. 17ம் வயதில் பெற்றோரை இழந்தாலும் போர் வீரர், ராஜதந்திர நிபுணர்என்ற முறையில் அவர் பேரும் புகழும் அடைந்தார். ஜனதிபதி ஜாக்கரி டெய்லர் சிறு குழந்தையாக இருந்தபொழுது அவருடைய பெற்றோர்கள் அவரை மாட்டு வண்டி மூலமாக வெர்ஜினியாவிலிருந்து கென்டக்கியில் லூயிவில்லியில் அபிவிருத்தி அடையாத ஒரு பிரதேசத்துக்கு நூற்றுக்கணக்கான மைல் எடுத்துச் சென்றனர்.

மில்லார்டு பில்மோர். ஜேம்ஸ் புக்கானன், ஆபிரஹாம்லிங்கன். ஜேம்ஸ் எ கார்பீல்டு ஆகிய நான்கு அமெரிக்க ஜனதிபதிகளும் மரக்கட்டைகளால் தயாரிக்கப்பட்ட விடுதிகளில்தான் பிறந்தனர். செஸ்டர் எ ஆர்தர் என்பவர் சிறு மரவீட்டில் தான் பிறந்தார். இந்நாட்டின் ஆரம்பகாலத்தில் ஆயிரக்கணக்கான அமெரிக்கக் குடும்பத்தினர் தங்கிய மர வீடுகளை விட கொஞ்சம் பெரியது இது.

இவர்களில் லிங்கன் தான் மிகப்பிரபலமானவர்- ஏனெனில் பல எதிர்ப்புக்களை சமாளித்து தம் வாழ்க்கையை ஆரம்பித்த இவர் மற்ற எந்த அமெரிக்க ஜனதிபதியும் அடைந்தது போன்ற மகத்தான சாதனையுடன் பிரதம நிர்வாகியின் பதவியைவிட்டு விலகினர். தாம் கல்வி பெறுவதற்கு லிங்கன் கையாண்டமுயற்சிகள், கட்டை உடைப்பவர், கிடங்குகுமாஸ்தா தபால் அதிகாரி, சர்வே அதிகாரி பொது நிர்வாகி ஆகியஅவர்

செய்த உத்தியோகங்கள் தற்பொழுது உலக சரித்திரமாக மாறியுள்ளன.

உயர்வைக் கோருகின்ற பத்திரிகையாளர்கள் வாரன் ஜி. ஹார்டிங் உதாரத்தை கவனிக்கலாம்- சிறு பையனுக இருககும் பொழுது இவர் அச்சுத் தொழிலைக் கற்றுக்கொண்டார்- இளைஞராக இருக்கும்பொழுது ஒரு சிறு தினசரியில் வேலை செய்து மற்ரெருரு நண்பருடன் அவ்வெளியீட்டை வாங்கினுர்.

அமெரிக்க ஜனுதிபதிகளின் பட்டியலை கவனித்துப் பார்க்கையில் சுதந்தரமாகவும் சமமாகவும் இருப்பதற்கு எல்லா மக்களுக்கும் இருக்கும் உரிமை 1789ல் நாட்டின் முதலாவது ஜனுதிபதி ஜார்ஜ் வாஷிங்டன் பதவியேற்றபொழுது இருந்ததைப் போலவே இப்பொழுதும் இருப்பது தெளிவாகத் தெரிகிறது. வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலிருந்தும் பல்வேறு சமுதாய அமைப்பிலிருந்தும் வரும் ஜனுதிபதிகள் ஜனநாயகத்தில் வாழும் பிரதிபிம்பமாகத் திகழ்கின்றனர். நாட்டு மக்களின் தலைவர்களாகவும் பணியாட்களாகவும் அவர்கள் இருக்கின்றனர்.

# படித்தோம்!

திருக்கயிலைத் திருவாசகம்: திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசிஅருள் நந்தித் தம்பிரான் சுவாமிகளவர்கள் திருவுளப்பாங்கின்படி துன்முகி ஆவணிமூல நன்னுளில் வெளியிடப்பெற்ற இலவசவெளியீடு.

அப்பர்பெருமான் திருவையாற்றில் திருக்கயிலைக் காட்சி கண்டபோது பாடியருளியதிருப்பதிகமும் மற்றுஞ்சில அருட்பாடல்களும் இதில் அடங்கியுள்ளன.

## திரு, குமாரசாமி ராஜா

இராஜபாளையம் செப் 12- திரு குமாரசாமிராஜா தான் வகித்துவந்த ஒரிஜா கவர்னர் பதவியை இன்று காலை இந்தியக் குடியரசுத் தலைவரிடம் ஒப்படைத்துவிட்டார். இராஜபாளையத்திலிருந்தபடியே தந்தி மூலம் இவர் பொறுப்பை ஒப்படைத்துள்ளார்.

இந்திய அரசாங்கச் செயலாளருக்கும் கவர்னர் பதவியை ஏற்கவிருக்கும் திரு, பீம்சென் சர்ச்சாவுக்கும் இச் செய்தியை அறிவித்துள்ளார்.



படத்தில். இந்திய சர்க்கார், திட்டமந்திரி ஸ்ரீ குல்சாரிலால் நந்தா ரிஷிகேசத்தில் பாரத சாது சமாஜத்தின் முதல் கூட்டத்தில் பேசுவதைப் படத்தில் காணலாம். ஐந்தாண்டுத் திட்ட வெற்றிக்குப் பாடுபட்டு வருகிற சுயேச்சை ஸ்தாபன வரிசையில் பாரத சாது சமாஜ் புதிதாகச் சேர்ந்துள்ள ஒரு ஸ்தாபனமாகும். அது 11 அம்சத் திட்டம் ஒன்றை வகுத்திருக்கிறது.

## சைக்கிள்டயர்கள் உற்பத்தி

1954ல் இந்தியாவில்மொத்தம் 5226005 சைக்கில்டயர்கள் உற்பத்திசெய்யப்பட்டன. 1955-ல் அதன் உற்பத்தி 57,48.100ஆக உயர்ந்துவிட்டது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-50
துன்முகி-புரட்டாசி-12
27-9-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## குறிஞ்சி

பாங்கி மதியுடம்பாட்டின்கண் தலைவன் தன் நெஞ்சைநோக்கித் தலைவி தன்பால் அன்புடையாளென்று கூறித் தெளிவித்தது.

இறுகுபுன் மேய்ந்த வறுகோட்டு முற்ற, லள்ள லாடிய புள்ளி வரிக்-
கலை, வீணை யம்பின் வில்லோர் பெருமகன், பூந்தோ யாப்பின் மிஞிலி
காக்கும், பாரத் தன்ன வார மார்பிற், சிறுகோற் சென்னி யாரேற் றன்ன,
மாரி வண்மகி ழோரி கோல்லிக், கலிமயிற் கலாவத் தன்னவிவ.
ளோலிமேன் கூந்த னம்வயி ஞனே-265 :பரணர்

காய்ந்த புல்லைமேய்ந்த முற்றிய உதிர்ந்த கொம்பையுடைய-
சேற்றிலோட்டி வருந்தச்செய்த புள்ளியையும் வரியையுமுடைய
கலைமானை எய்யும் ஒலியைக்கொண்ட அம்பையும் வில்லையுமுடைய
வீரர் தலைவனாகிய பொலிந்த தோளிலே கவ்சம் பூட்டிய மிஞிலி
என்பவனாற் காக்கப்பெறுகின்ற பாரம் என்னும் ஊரைப் போன்ற
-ஆத்திமாலையணிந்த மார்பையுடைய சிறிய செங்கோல் கொண்ட
சோழனது ஆரேற்றைப் போன்ற-மழையையொத்த கொடையும்
கள்ளுணவுமுடைய ஓரியினது கொல்லிமலையிலிருக்கின்ற கலிப்பை
யுடைய மயில்போன்ற நமது காதலி- அதன் தோகை போன்ற
தழைத்த மெல்லிய கூந்தலையுடையவள் நம்பால் உள்ளாள்.

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

யாழு மெழுதி யெழின்முத் தெழுதி யிருளின் மேன்பூச்
சூழு மெழுதியோர் தொண்டையுந் தீட்டியென் றேல்பிறவி
யேழு மெழுதா வகைசிதைத் தோன்புலி யூரிளமாம்
போழு மெழுதிற்றேர் கோம்பருண் டேற்கோண்டு போதுகவே.

:—திருச்சிற்றம்பலக் கோவையார்-79

உரை: 'யாழும் எழுதி - இவளது சொல்லோடொத்த யாழையும் எழுதி, எழில் முத்தும் எழுதி-பல்லோடொத்த அழகிய முத்தையும் எழுதி, இருளில் மென்பூச் சூழும் எழுதி — கூந்தலோடொத்த இருளின்கண்மெல்லிய பூவாணியன்ற சூழையும் எழுதி, ஒரு தொண்டையும் தீட்டி - வாயையொத்த ஒரு தொண்டைக்கனியையும் எழுதி, இளமாம் போழும் எழுதிற்று-கண்ணையொத்த இளையதாகிய மாவடுவகிரையும் எழுதப்பெற்ற, ஓர் கொம்பர் உண்டேல் -ஒரு கொம்பு உண்டானல், கொண்டு போதுக-அதனைக்கொண்டு எம்மூர்க்கண் மடலேற வருவீராக' என்பதாகும்.

அறிவாற் சிவனேயாகிய மணிவாசகப் பெருந்தகையாரோடு ஒன்றாகி அவரது திருவாக்கிற் கலந்தும், உடனாகி அவரைப் பாடவைத்தும், வேறாகி அவர் பாடியவற்றை எழுதியும் அழகிய திருச்சிற்றம்பலமுடையார் நமக்கு உதவிபுரிந்தார். அவ்வுதவியின் பயனாகக்கிடைத்த திருச்சிற்றம்பலக்கோவையார், புறக்காட்சியில் அகப்பொருள் நூலாகக் காணப்படுவதே யெனினும் அகக்காட்சியில் அது ஒரு ஞான நூலென்பதை அறிந்தவர் அறிவர்.

அகத்துறையில் இயற்கைப் புணர்ச்சிமுதல் பரத்தையிற் பிரிதல்வரை இருபத்தைந்து கொத்துக்கள் உள்ளன. இக்

கொத்துக்கள் ஒவ்வொன்றும் தனித்தனியே பற்பல கிளவிகளை உடையன. இயற்கைப் புணர்ச்சியைத் தொடர்ந்து பத்தாவதாக வருவது 'மடற்றிறம்' என்னும் கொத்து.

இது ஒன்பது துறைகளையுடையது. அவை ஆற்றாதுரைத்தல், உலகின்மேல் வைத்தல், தன்றுணிபுரைத்தல், மடலேறும் வகையுரைத்தல். அருளாலரிதெனல், நடையாலரிதெனல், அவயவமெழுதல் அரிதெனவிலக்கல், என்பனவாம்

இவற்றுள் ஏழாவதாகிய 'அவயவமெழுதலரிதென விலக்கல்' என்னும் துறைப்பொருளையுடையது மேற்கண்ட பாடல். இதற்கு 'அவயவ மானவை யிவையிவை யென்றது' எனச் சிற்றின்பக் கிளவியும் 'சிவனது கருணையுஞ் செயலு மொருவரா, லறியப் படாதிஃ தரிதே யென்றது' எனப் பேரின்பக்கிளவியும் குறிக்கப்பெறும்.

'மடற்றுறை யொன்பதுஞ் சிவத்திடைமோக, முற்ற வுயிரருள் பற்றி யுரைத்தது' என்று திருச்சிற்றம்பலக்கோவையாருண்மை இக்கொத்துக்குப் பேரின்ப விளக்கம் கூறும்.

இங்கே தலைவன்பக்குவான்மாவும் தலைவி பரம்பொருளுமாவர். சிற்றின்பத்துறையில் தலைவியை அடைவது குறித்துத் தலைவன் மடலேறுவது இயல்பு. அது சிவத்தை அடைவது குறித்து உயிர் அருள்பற்றுவது எனப் பேரின்பத்துறையில் விளக்கப் பெற்றது.

தேவார முதலிய மற்றைத் திருமுறைகளிலும் பிற நூல்களிலும் வரும் துறைப்பாடல்களெல்லாம், உயிரை நாயகியாகவும் இறைவனை நாயகனாகவும் சொல்லும் திருக்கோவையாரில் உயிரை நாயகனாகவும் இறைவனை நாயகியாகவும் சொல்லப் பெற்றுள்ளது. இந்நூல் தனியே ஒவ்வொரு துறைகளைச் சொல்லாது முழுவதும் கோவையாகச் சொல்லும் இன்பத்தைப் பெறுபவன் நாயகனும் அதனை வழங்குபவள் நாயகியுமாதலால் அந்தமுறையில்சிவபோகத்தைப் பெறுகின்ற உயிர் நாயகனும் அதனை வழங்குகின்ற சிவம் நாயகியுமாக இந்நூலிற் கூறப் பெற்றது என்பது உணரத்தக்கதாம்.

இதனை இந்நாலிற் பல இடங்களில் தலைவிபாற் பெறும் இன்பத்தைச் சிற்றம்பலம் போன்றது, சிவானந்தம் போன்றது

என்பது முதலாக ஆசிரியர் கூறும் கூற்றுக்களால் உணரலாம். சிவபெருமானிடத்தில் மோகமுற்ற உயிர் அவனது திருவருளைப் புணையாகப் பற்றி நின்று அவனை அடைதற்கு முயலும் முயற்சியை நாயகியினிடத்துக் காதல்கொண்ட நாயகன் அவளது படத்தைத் துணையாகப் பற்றிச்சென்று அவளை அடைவதற்கு மடலேறுவதோடு இணைத்துணர்த்திய ஆசிரியரது பெருந்தகவு பெரிதும் போற்றுதற்குரியதாகும்.

அடைவதற்கு அரியவரான பெண்மக்களிடம் காமஇன்பத்தை உளமகிழ நுகர்ந்துவிட்டுப் பின்பு அதனைப் பெறுதற்கியலாது வருந்துகின்ற ஆடவருக்கு ஆறுதல் இன்பந்தரவல்ல வலிமையுடையது மடலல்லது வேறில்லையென்பதை, 'காமம் உழந்து வருந்தினர்க் கேமம், மடலல்ல தில்லை வலி' என்ற திருக்குறளால் திருவள்ளுவர் பெருமான் அறிவுறுத்துகின்றார்.

தலைவியைக் களவுப் புணர்ச்சியிற் புணர்ந்த தலைவன், மீண்டும் அவளைக்காண்பதற்கு வாயிலாகத் தன் பாங்கனைக் கூடுதல் 'பாங்கற்கூட்ட' மெனப்பெறும். தலைவியை அடிக்கடி காண்பதற்கு உதவிபுரியும்படி அவளது தோழியைக் குறையிரந்து அவளைத் தலைவன் தன் கருத்துக்கு ஒத்துவரும்படி உடம்படுத்தல் 'மதியுடம்படுத்த'லாம். தோழியை உடம்படுத்தும் தலைவன் அதற்கொரு கருவியாகத் தான் மடலேற இருப்பதைத் தெரிவித்தல் 'மடற்றிறம்'

தலைவனது கருத்தையொத்து உடம்பட்ட தோழி தலைவியினது கருத்தையும் மெல்ல அறிந்துகொண்டு அதனைத் தலைவனுக்குச் சொல்லத்தொடங்கிய பொழுது தனக்குள் தோன்றிய நாணத்தால் சொல்லாதிருப்பாள். பாங்கியிடைச் சேர்ந்ததிலிருந்து தலைவன் நெருங்கிப் பேசி அவளிடம் உரிமையோடு பழகப்பழக அவளது நாணம் சிறிது சிறிதாக விலகத் தலைப்படும். என்றாலும் தலைவி கருத்தைத் தலைவனிடம் தானே பேச்செடுத்துச் சொல்லத் தலைவி கூசுவாள்.

தலைவன் தோழியுந் தலைவியும் ஒருங்கிருக்கும் வேளையில் அவர்கள்பாற் சென்று குறையிரந்து மடலேறுங் குறிப்பை அவர்களுக்கு உணர்த்துவான். மடலேறுதலென்பது 'காம எண்ணம் முதிர்ந்த ஆடவன் தான் காத

வித்த நங்கையைக் கூடுதற்கு விருப்பி எருக்கம்பூ மாலையைத் தலையிற் சூடிப்பனைமடற்கறுக்கு களாற் செய்யப்பட்ட ஒரு பொய்க்குதிரையின்மேற் காற் சதை களறுந்து இரத்தங்கசியும் படி ஏறித் தலைவியின் உருவத் தையும் தன் பெயரையும் ஒரு படத்திலெழுதிக் கையிற் பிடித் துக்கொண்டு தலைவியிருக்கும் வீட்டின் தெருவில் அக்குதிரை யைப் பிறரால் இழுப்பித்துவரச் செய்து எல்லோருக்கும் தனது கருத்து வெளிப்பட ஆரவாரஞ் செய்தலாகும்.

இவ்வாறு தன் உடம்பை யொறுத்து மடலேறத் துணிந்த தலைவனைப் பலவகைகளில் தடுக்க முற்படுகின்ற தோழி தலைவியினது உறுப்புக்களைப் படத்தில் எழுதுதல் இயலாதது என்றும் கூறுவாள். தலைவியி னது மொழி யாழோசையை ஒத்த இனிமையையுடையதாத லின், எழுதமுடியாத அவ் வோசை படத்திற்கு எப்படி வர முடியும்? முத்து கடலில் இருப் பது. பூச்சூழ் செடியிலிருப்பது. கோவைக்கனி கொடியிலிருப் பது. மாவடு மரத்திலிருப்பது. இவையனைத்தையும் ஒரு கொம் பரில் அமைப்பது எவ்வாறு பொருந்தும்? எனவே தலைவி யின் படம் எழுத முடியாதது தானே! என்று கேட்கிறுள் தோழி.

'தொல்பிறவி ஏழும் எழுதா வகைசிதைத்தோன்' எனக்கூறி, முன்னைப்பிறவிகளிற் சேர்ந்த சஞ்சிதவினையை அடியோடு ஒழித்த ஆண்டவனது பெருங் கருணைத்திறத்தை ஆசிரியர் நமக்கு அறிவுறுத்துகின்றுர்.

## தமிழும்ஒன்ருக இருக்கவேண்டும்

ஈபோ (வடமலேயா) செப் 25- 'மலேயாவில் ஆட்சி மொழிக ளில் ஒன்ருகத் தமிழ் ஆக் கப்படவேண்டும்' என்று மலேயா விலுள்ள தமிழ்த் தாபனங்கள் வற்புறுத்தியுள்ளன.

மலேயாவில் இருக்கிற 109 தாபனங்களின் பிரதிநிதிகள் அண்மையில் கூடிமேற்படி மனு வைத் தயாரித்தார்கள். 50இலட் சம் தமிழர்களுக்குப் பிரதிநிதித் துவம் வாய்ந்தவை, இந்தத்தாப னங்கள்.

மலேயாவில் ஆட்சிமொழிக ளில் ஒன்ருகத் தமிழ் ஆக்கப் படவேண்டும் என்று மனுவில் வற்புறுத்தப்பட்டுள்ளது.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன்தொடர்ச்சி)

மூத்தமகன் அச்சேட்டைக ளைத் தடைசெய்யாம லிருக்க லாமா? அவனுக்குத் தற்காப்புத் திறன் இருக்கிறதோ? இல் லையோ? அது வேறு விஷயம். அச்சேட்டைகள் அவனைத் தொழுது வணங்கு மவனது நெஞ்சைக் கத்தி கொண்டறுக் கும். அவன் தனது மானம் போவதாகவே கருதுவான். அஃதுண்மையுமாம். அவன் மரக்கட்டையல்லன். ஆகலின் 'பொறையெனப் படுவ தாடவர் தமக்குப் பூணெனப் புகலினும் பொருந்தார்-முறையறப் புரிந்தா லக்கணத்தவர்தம் முடித்தலை துணிப்பதே முழுப்பூண்' என்ற வில்லிவாக்கை அவன் அத்துஷ் டப்பயலிடம் செயற்படுத்தத் தான் நேரும். பாரத தேசீயக் கொடியைத் தாம் எரிக்கப்போவ தாகச் சொன்னார் ஈ-வெ-ரா. அதைக்கேட்டு நேருமுதலியோர் சீறினர். ஏன்? அக்கொடிக்குத் தன்னைக் காத்துக்கொள்ளத் திறனில்லை யென்பதாலா? அன்று. அக்கொடி எரிக்கப் பட்டால் தேசத்தின் மானம் அதாவது தேசமக்களின் மானம் பாதிக்கப்படும். அம்மானத்தைக் காக்கவே வேண்டும். அதுவே அச்சீற்றத்துக்குக் காரணம். அதுபோல் ஆண்டவன் சாமர்த் தியம் ஆஸ்திகருக்குத் தெரியும். அவரது முயற்சி அவனைக் காப் பதற்கன்று, தமது மானத்தைக் காத்துக்கொள்ளவே யாம். விநோபா விவகாரத்தை மாற்றி விளம்பரஞ்செய்து ஆத்திகரின் ஊக்கத்தைச் சிதைக்கப்பார்க்கி றார். அச்செயல் நாத்திகருக்கு மறைமுகமாகத் துணை போவ தாகும். அத்தகைய விநோபா வுக்கு அர்ச்சனை விஷயமாக அபிப்பிராயஞ்சொல்லத் தகுதி யில்லை நவீனர் ஆற்று வெள்ளத் தில் அடியுண்டுபோகிறார். கை யில் துரும்பொன்று சிக்குகிறது. அது தெப்பமாகாதா, தப்ப லாமே என்பது அவர் பக்கம்.

அது தீருமா? விநோபாவை சைவ சமயத்தைச் சாராதவரென்பதையும் அவர் தெரிக.

கோவில்களுக்குப் பக்தர்கள் தேவையென்றுரவர். கோவில்களுக்குப் பக்தர்கள்கணக்கின்றி வருகின்றனர். உத்ஸவ காலங்களில் அது பிரத்தியட்சம். ஆகலின் தமிழர்ச்சனை மிகையே. பக்தருக்குத்தான் கோயில்கள் தேவை- இப்போதுள்ள சைவாலயங்களை சிவாகம ரீதியில் போற்றுவதே அத்தேவையைப் பூர்த்தி செய்வதாகும். ஆனல் நவீனர் அவ்வாலயங்களை அப்படிப் போற்றும் விருப்பினரல்லர். அவை மக்களின் உயிருக்கு உறுதியளிக்கவே உளவாயின. சைவமடங்களும் அப்பொருட்டேயாம். நவீனர் அவ்வுயிரை மறந்து உடலங்களே உயிரென மயங்கினர். உடல் வளர்ச்சிக்கானசோறுகொடுப்பதேமேலான அறம், அதுவே மக்கட்சேவை, செய்யற்பாலதும் அதுவே என் பாரவர். அதற்கு வகையென்றுமில்லையானல் தகாதனசெய்யவும் அவர்சித்தம். 'ஈன்ருள் பசி காண்பாணுயினுஞ் செய்யற்க சான்ருேர் பழிக்கும் வினை' என்ற குறளை அவர் ஏலார். அதனுல் 'மடாலயங்களின்பேரில் இருக்கும் சொத்தையெல்லாம் ஏழைகளின் துன்பத்தைத் துடைப்பதில் செலவழிக்கலாம். மடாலயத்தின் கடைசிக்கல்லைக்கூட விற்று ஏழைகளின் துன்பத்தைத் துடைப்பதில் குற்றம் இல்லை. அப்போதுதான் நாட்டில் உண்மையான தெய்வபக்தி நிலவும் (4-2-54 தினமணி) என்கிருரவர். மடங்களேயிடி, ஆலயங்களைத்தகர், அவற்றின் செல்வத்தைக் கொண்டு ஏழை மக்களின் வயிற்றை நிரப்பு. அப்போதுதான் அவரிடந் தெய்வ பக்தி நிலவும் என்கிற அவர் தமிழர்ச்சனையாற் பக்தி பெருகுமென்ருர். பக்தி நிலவுதற்கு வயிறுமுட்ட வேண்டுமென்பதும் தமிழர்ச்சனைவேண்டுமென்பதும் ஆபாச விவகாரமே.

13. 'இதே(தமிழ்மொழியில்) வழிபாடு தேசியமெங்கும் பரவுகின்ற காலத்தில் தமிழ்மொழி வழிபாடு என்ற முறையில் இராது. தாய்மொழி வழிபாடு என்ற பெயர் உண்டாகிவிடும்... வேற்றுநாட்டவர்களுக்கும் வழிபாடுமுறை தெரிய வேண்டும். அதற்காக அருச்சகர்கள் அனைத்திய மொழிகளையும் தெரிந்து கொள்ளல் வேண்டும். அவர்கள் விரும்பினல் திருக் கோயில்களில் அம்மொழிகளி

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலகுருவர்யர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி புரட்டாசி-12

## அருணந்தி சிவம்

சந்தான பரம குரவருள் இரண்டாவதவராகிய அருணந்திசிவாசாரிய சுவாமிகளின் குருபூசைத் திருநாள் **2-10-56** சேவ்வாய்க் கிழமையாகும். இறைவனை அடைவதற்குரிய நெறிகள் இரண்டெனச் சமய நூல்கள் கூறும். அவைவிதி மார்க்கமும் பக்திமார்க்கமுமாம். விதி மார்க்கத்திற் குறைவறஒழுகி அதனை நம்மனோருய்ய உணர்த்தியருளியவர்கள் சந்தானகுரவர்கள்.

அவர்களில் முதல்வராகிய மெய்கண்டதேவரது குலகுருவாக விளங்கியவர் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள். எத்தனைதான் நூலறிவிற் சிறந்தவர்களா யிருந்தாலும் குருவருளும் திருவருளும் கைகூடாதவரை அவர்களுக்கு உய்தியில்லையென்பதற்கு இக்குருமூர்த்திகளது வரலாறு இணையற்றதோரு எடுத்துச்காட்டா யிலங்குகின்றது.

மெய்கண்ட தேவர், மெய் கோண்டு வந்து பிறப்பதற்கு வழி காட்டியவர் அருணந்திசிவம். அச்சுதகளப்பாளருக்குமகப்பேறின்மை பற்றி வந்த வருத்தத்தைத் தேவாரத்திருமுறையிற் கயிறு சாத்திப் பார்த்து மகப்பேற்றுக்கு வழி கூறி நீக்கிய பேரருளாளராகிய அருணந்தியார், அவரது குறிப்பின்படி வந்து பிறந்த மெய்கண்டதேவருக்கு முதல் மாணவராக ஆயினரேன்னும்உண்மை, ஆண்டவனது

திருவருள்நிகழ்ச்சி உலகியலுக்கு அப்பாற்பட்டதாகவும் நிகழ்வதுண்டு என்பதை எடுத்துக்காட்டுகின்றது.

மெய்கண்டதேவநாயனாரால் ஆக்கியருளப்பெற்ற சிவஞானபோதம் பன்னிரண்டு சூத்திரங்களையுடையது. சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறித்தாங்கு, அறிவுநூல்களின் பொருளெலாம் அகத்தடக்கிக் கொண்டிருக்கின்ற அந்நூலுக்கு ஆசிரியர் அருணந்திசிவம் செய்யுள் வடிவத்திற்செய்தபெருநூல் சிவஞான சித்தியார்என்பதாகும்.

'என்னையிப் பவத்திற் சேராவகையெடுத் தென்சித் தத்தே, தன்னை வைத் தருளினலே தாளிணை தலைமேற் சூட்டும், மின்னமர் பொழில்சூழ் வெண்ணெயமேவிவாழ் மெய்கண்டான்' எனவும் 'கண்ணுதலுங் கண்டக் கறையுங் கரந்தருளி மண்ணிடையில் மாக்கள் மலமகற்றும், வெண்ணெய்நல்லூர், 'மெய்கண்டான்' எனவும் தமது ஆசிரியரைச் சிவத்தின் வேறல்லாத தல்லாதவராகக் கண்ட இந்தஞானசாரியரது திருவருட்பெருக்கம்நினைவிலிருத்தத்தக்கதாகும்.

ஆகமங்களனைத்தையும் ஐயந்திரிபற ஓதியுணர்ந்த திருநந்திதேவருக்கு உண்டாகிய மலைவைத் திருக்கயிலாய மலையிற் சீகண்ட பரமசிவன் சிவஞானபோதத்தை உபதேசித்து நீக்கியருளினர். அதுபோலவே தென்னுடுசெய்த தவப்பயனுகத் தோன்றி வடநூற்கடலையும் தென்றமிழ்க்கலைகளையும் நிலைகண்டுணர்ந்து சகலாகமபண்டிதரென்னும் சிறப்புப்பெயர் பெயர் பெற்று விளங்கிய அருணந்திதேவருக்குச் சித்தாந்த உண்மைபற்றி வந்த மலைவை, அத்திருக்கயிலாய பரம்பரையில்வந்தமெய்கண்டதேவராலன்றிவேறுயாரால் நீக்கமுடியும்?

ஆணவமலத்தின் உண்மையுணர்த்தும் முகமாக அருணந்திசிவத்தைஆட்கொண்டார் மெய்கண்டதேவர். தமதுஞானசிரியரது கருணைப்பெருக்கை முழுதும் முகந்துகொண்டபடியால் அருணந்திசிவத்தினது அருளுபதேசம் இன்றுவரை-இனி எந்த நாளிலும் நமக்கு உய்திக்கு வழிகாட்டிக் கொண்டிருக்கின்றது என்பதுஉணரத்தக்கதாகும்.

[7பக்கத் தொடர்ச்சி)

லும். வழிபாடு நடைபெறச் செய்தல் வேண்டும். ....எந்த மொழியிலும் அருச்சனைசெய்ய அருச்சகர்கள் தயாராக இருக்க வேண்டும்' (8-7-55தமிழ்நாடு) என்கிறார் நவீனர். 'எந்தமொழியிலும் வழிபாடு நடக்கட்டும்' என அவர் கூறியது முன்காட்டப்பட்டது. வழிபாடு என்ற பதத்தை அவர் அடிக்கடி வழங்குகிறார் வாதவிஷயம் தினத்தந்தி யர்ச்சனை யொன்றே. ஆகலின் அப்பதம் அவர் வாயிலிருந்து வரும்போதெல்லாம் அவ்வர்ச்சனையையே குறிக்குமென்பதை இந்தக் கட்டுரையை வாசிப்பவர் .மறந்துவிடக் கூடாது. தமிழ்மொழி வழிபாட்டிலிருந்து தாய்மொழி வழிபாட்டிற்குத் தாவினார் நவீனர். ஏன்? மற்றைப் பிரதேசமொழிக்காரரும் தம்மோடு சேர்வரென அவர் நம்பினார்போலும் ஆந்திர முதலிய சில பிரதேசங்களைச் சேர்த்துத் திராவிடநாடெனப் பெயரிட்டு அந்நாடு வேண்டுமெனப் பல வருஷங்களாக மண்டைவெடிக்கக் கத்தினார் ஈ-வே-ரா. அக்கத்தல் தமிழகத்துக்குள்ளே தானிருந்தது. ஆந்திர முதலிய பிரதேசத்தார் அதைச் சட்டை செய்யவில்லை அவ்விராவுஞ் சலித்தார். அவருக்கே சப்பிட்டுப் போயிற்று அவர் கனுக்கண்ட திராவிடநாடு. 'திராவிடநாடு பிரிய வேண்டுமென்று ஆந்திர, மலையாள, கன்னட மக்கள் கவலைப்படவில்லை. வடமொழித் தொடர்பு அவர்கள் மொழியில் இருப்பதால் அவர்கள் வடவர் மொழி ஆதிக்கத்தை எதிர்க்க மனநிலை இல்லாதவர்களாய் உள்ளனர்' (18-7-55 தமிழ்நாடு) என அவரே கூறினார். அங்ஙனமே மற்றைப் பிரதேசத்தினருள் எவரும் தம் பிரதேச ஆலயங்களில் நடந்துவரும் சம்ஸ்கிருத அர்ச்சனையை விடார், தம் பிரதேசமொழியர்ச்சனை நடக்க இடமுங் கொடார். ஆகலின் நவீனரும் அவ்விராப்போலவே கோட்டைவிடுவர். அது நிச்சயம். அவர் அப்படித் தாவினதற்கு இன்னொரு காரணமுமுண்டு. தமிழகத்திலேயே பிறமொழிகளைத் தாயெனக் கொண்டவரும் வாழ்ந்துவருகின்றனர். நவீனர் தமிழர்ச்சனை யென்றவுடன் அவரிடமிருந்து எதிர்ப்புமுறையில் ஆங்காங்கே தெலுங்கர்ச்சனை முதலியவும் புறப்பட்டுவிட்டன. அது கிணறு வெட்டப்

பூதம் புதம்புறப்பட்டது போலா யிற்று. ஆரம்பத்தில் நவீனர் அதை எதிர்பார்க்கவில்லை. அவ் வெதிர்ப்பைக் கண்டதும் தம் கொள்கை செத்திடுமோ வென அவர் ஐயுற்று நடுங்கினர்- செத் தால் அவரைச் சந்தி சிரிக்கும். ஆகலின் தம் கௌரவத்தைக் காத்துக்கோடல் அவருக் கவ சியமாயிற்று. அதற்காக அவ் வெதிர்ப்பாளரைத் தம்மோடு சேர்த்துக் கொள்ள விரும்பித் தமிழ்மொழியர்ச்சனையை யுதைத்துத் தள்ளிவிட்டுத் தாய் மொழியர்ச்சனைக்குத் தாவினு ரவரெனவுங் கொள்ளலாம்-

ஆனாலும் அருணகிரியார்முத் தமிழால் வைதாரை வாழவைக் கும் தமிழ் என்றார்' (16-6-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். தம் தமிழரென்ற பெருமிதம் அவரைவிட்டுப் போகவில்லை. அருணகிரியார் அப்படியா பாடி னார்? முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முருகன்என்ற கரு த்துப்படவே அவர்பாடியுள்ளார் அதிலுள்ள உண்மையை நவீ னர் விட்டனர். ஏனோ? அது கிடக்க. 'கோட்டானே நாயே குரங்கே யுனையொருத்தி போட் டாளே வேலையற்றுப்போய்' என்றார்காளமேகர். அதிலுள்ள வைதல் மொழிகளனைத்துந் தனித்தமிழ். நான் முருகனை அப்படி வைதால் அவன்என்னை வாழவைப்பானோ? அஃதிருக் கட்டும்- தனித்தமிழ் விருப்பின ராகிய நவீனரையே நான் அப் படி வைகிறதாக வைத்துக் கொள்ளலாம். அவர் என்னை வாழவைப்பாரா? ஐயோ! சும்மா விட்டாற்போதுமே- அவர் முருகனை மந்தைக் குறிக்கல் லென எண்ணிக்கொண்டனர் போலும். அப்பெருமானைத் தமிழ்முதலிய எந்த மொழி யில் வைத நாக்குந் துண்டிக் கவே படும். சாத்திரச் செய்யுட் களைத் தப்புப்பாடமாக் எழுதி அதற்குத் தவறான அர்த்தஞ் சொல்லி நாத்திகரை அவர் கைதூக்கி யாள்கிறார். நாத்திகர் பல்கிப் பெருகுமாறு அவரை அங்ஙனம் ஊட்டி வளர்த்தவர் அந்நவீனரன்றி வேறு யார்? இன்னுங்காண்க- முருகனை மற்ற மொழிகளால் வைதால் வைதவரை அவன் வாழவைக்க மாட்டானா? அவனுக்கு வைதல் மொழிகளிலுள்ள பொருள்கள் முக்கியமன்று; அம்மொழிகள் தமிழாயிருந்தால் அதுவே போதும் போலும்!

(தொடரும்)

## உபரிப்பணம்

சென்னை செப் 25

இந்து அறநிலையப் பாதுகாப் புச்சட்டத்தின் சில பிரிவுகளைச் செல்லாதென்று சென்னை உயர் நீதிமன்றம் அறிவித்திருப்பதை யொட்டி மடங்கள் கோயில்க ளின் வசமுள்ள உபரி வருமா னத்தை அரசாங்கத்தினுல்எடுத் துக்கொள்ளஇயலவில்லையென்று சட்டசபையில் இன்று அறநிலை யப்பாதுகாப்பு அமைச்சர் திரு, பி பரமேசுவரன் கூறினர்.

திரு வி ஆர் கிருஷ்ணஅய்யர் கேள்விக்குப் பதிலளிக்கையில் மேற்கண்டவாறு அமைச்சர் கூறினர்.

அமைச்சர் தொடர்ந்துகூறிய தாவது:

சென்னை அரசாங்கத் தலைமை வழக்கறிஞர் கூறிய யோசனை யின் பேரில் உயர்நீதி மன்றத் தின் முடிவை எதிர்த்து இந்தி யத்தலைமை உயர்நீதி மன்றத் திற்கு சென்னை அரசாங்கம்அப் பீல்மனுச்செய்துகொள்ளவில்லை.

கல்விக்காகச் சமய நிலையங்க ளின் வசமுள்ள உபரி நிதியைப் பயன்படுத்துமாறு இந்திய அர சாங்கம் கூறிய யோசனைக்கு சென்னைஅரசாங்கம் இதுபற்றி பதில் எழுதிவிட்டது.

---

## நியாயவார மசோதா

சென்னை செப் 26.

குத்தகைக்காரர் நியாயவார மசோதா இன்று சென்னைசட்ட சபையில் நிறைவேறியது. அக் டோபர் 1ம்தேதியிலிருந்து இம் மசோதா அமுலுக்கு வருகிறது. நன்செயாக இருந்தால் குத்தகை காரர் மொத்த விளைச்சலில் 40 சதவிகிதமும் தோட்டம் புன் செய் நிலங்களாக இருந்தால் மொத்த விளைச்சலில் 33 1/3சத விகிதமும் நிலச் சுவான்தாரர்க ளுக்குத் தரவசதி செய்கிறது. ஒரு வேலிக்குமேல் [6 2/3 எக் கர்] நிலம் குத்தகை எடுப்பவர்க ளுக்கு இம்மசோதாவின் பிரிவு பொருந்தாது.

## ம. பொ. சி, கைது

சென்னை செப் 26-

தமிழ்நாடு வடக்கெல்லைப் போராட்டத்தில் தமிழரசுக்கழ கத்தலைவர் [ம பொ சிவஞானம் இன்று கைதுசெய்யப்பட்டார்.




சிவபோகசாரமும் சோக்கநாத வெண்பாவும்:— *தருமபுர ஆதீன வெளியீடு எண்: 373,* ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின்படி இந்தி, ஆங்கில மொழி பெயர்ப்புடனும், ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்ததேசிக பரமாசாரிய சுவாமிகள் சரித்திரப் படவிளக்கத்துடனும் துன்முகி ஆவணி மூலவிழா மலராக இது வெளியிடப்பெற்றுள்ளது. ஆங்கில மொழிபெயர்ப்பாசிரியர் திரு, ப மு சோமசுந்தரம்பிள்ளையவர்கள். இந்தி மொழிபெயர்ப்பாசிரியர் ஸ்ரீ ஸ்ரீநிவாசாசாரியாரவர்கள்.

தாரணியுய்யத் தோன்றிய தவமுதல்வராகிய குருஞான சம்பந்த மூர்த்திகள் தமது ஆன்மார்த்த மூர்த்திபேரில் சொக்கநாதவெண்பாவும் குரு மூர்த்தி பேரில் சிவபோகசாரமும் ஆக்கி வழங்கிச் சைவ சித்தாந்த உண்மையைப் புலப்படுத்தியருளினர்கள். அந்தப் பெருநூல்களிரண்டும் இன்றைய உலகத்திற்கு நன்கு பயன்படும்படி ஆங்கிலம், இந்தி மொழிகளில் வெளிவரும்படி கருணைபாலித்த ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் அருட்செயல் பாராட்டுதற்குரியதாகும்.

திருவெண்டுறைத் திருப்பதிகம்: *தருமபுரஆதீன வெளியீடுஎண்: 372.* ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் 7-9-56 மாத ஜன்ம நட்சத்திரநாளில் வெளியிடப் பெற்றது. வழக்கம்போல் ஆதீனத் தேவார பாடசாலை ஆசிரியர் திரு ஆர் வேலாயுத ஓதுவாமூர்த்திகள் தலச்சிறப்பு பொழிப்புரையாதியன எழுதியுள்ளார்கள்.

———

## காலமானர்

சென்னை செப் 23

போலீசுத் துணைக் கமிஷனர் திரு எ சுந்தரம்பிள்ளை இன்று காலை அரசாங்க மருத்துவ விடுதியில் உயிர் துறந்தார். இவருக்கு வயது 52.

——

# குற்றவாளி

சித-சேதுராமன்.

அவன் மனம் ஓர்நிலையிலில்லை. தனக்குப் பிறக்கப் போகும் குழந்தை ஆணா? அல்லது பெண்ணா? என்ற ஆலோசனையே இருந்தது அப்பொழுது அவன் மனதில். பிரசவ அறைக்கு வெளியே இங்குமங்குமாக நடந்துகொண்டேயிருந்தான்-நடராசன். பிரசவ வேதனையால் அவன் மனைவி கமலா துடித்துக் கதறுவது அவன் மனதை வாட்டியது.

"சார்!" என்ற நர்ஸின் குரல் கேட்டதும் தன் சுயஉணர்விற்கு வந்தான் நடராசன். "சார்!" மகன் பிறந்திருக்கிறான்.

என்ன-மகனா! ஆஹா! என் அதிஷ்டமே-அதிஷ்டம்'

'ஆனால்...'

'என்ன நர்ஸ்-என்ன?'

'தாய் மிகவும் ஆபத்தான நிலையிலிருக்கிறாள்.'

'என்ன?' அதற்குமேல் அவன் ஒன்றும் பேசமுடியவில்லை. முகமெல்லாம் வியர்த்துக்கொட்டியது.

'சார்! உள்ளே சென்றுபாருங்கள்' என்று கூறிவிட்டுச் சென்றாள் நர்ஸ். வேகமாக உள்ளே ஓடினான் நடராசன். கமலா கட்டிலில் படுத்திருந்தாள். நடராசன் கட்டிலின் அருகில் உட்கார்ந்துகொண்டு, 'கமலா' என்றான் மெதுவான குரலில்.

'அத்தான்!' என விம்மினாள். கண்ணீரைத் துடைத்தான் நடராசன்.

'என் கண்ணீர் விடுகிறாய் கமலா! அமைதியாயிரு'

'இன்னும் சிறிது நேரத்தில் நான் இறந்துவிடுவேன். தங்களைப்பிரிந்து-என்-நம் செல்வத்தைப் பிரிந்து வெகு தூரம் சென்றுவிடுவேன்' அதற்குமேல்

கண்ணீர் அவளைப் பேசவிடவில்லை.

'கமலா! என்னைத் தனிமையில்விட்டு, நீமட்டும் செல்லப் போகிறுயா? கூடவே கூடாது. நான்மட்டும் யாருக்காக வாழ வேண்டும். என் சுகதுக்கங்களில் பங்குகொண்ட நீயே சாகும் பொழுது நான்மட்டும்வாழமாட்டேன். அநாதியாகிய எனக்கு அன்புகாட்ட உலகத்தில் நீதானே இருந்தாய். நீயும் பிரிந்துவிட்டால்? நான்வாழவே மாட்டேன்' என்று கதறினுன்.

'அத்தான்! நீங்கள் வாழத்தான் வேண்டும். இல்லையேல் நம் குழந்தை அநாதையாக...' அவள் தொண்டையை அடைத்தது. 'அத்....தான்' அதற்கு மேல் அவள் பேசவில்லை. பேசமாட்டாள். இவ் வுலகவாழ்வை முடித்துக்கொண்டாள். பாவம். நடராசன் கதறினுன். என்ன செய்வது? 'மாண்டவர் மீண்டு வருவாரோ — இம்மாநிலத்தில்' என்று எங்கோ இசைத்தட்டு அலறிக்கொண்டிருந்தது.

* * *

நடராஜன் வேகமாக நடந்து கொண்டிருந்தான். கையிலே இரண்டுவயது நிரம்பிய பையனொருவனிருந்தான். அவன் வேறுயாருமல்ல. நடராசன்மகன் பாண்டியன்தான்.

ஒவ்வொரு பொருளாக வேடிக்கை காட்டியபடியே போட்டோ ஸ்டுடியோவினுள் நுழைந்தான் நடராசன்.

(தொடரும்)

## உங்களுக்குத் தெரியுமா?

பின்னடைந்த வகுப்பினரின் கஷ்ட நிவாரணத்துக்காகஇரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 90கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது; முதலாவது திட்டத்தில் இதற்கு 39 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருந்தது.

கொழும்புத் திட்டத்தின்கீழ் இந்தியாவிலுள்ள 80கலா ஸ்தாபனங்களில் 253 அயல் நாட்டு மாணவர்கள் கல்விபயின்று வருகின்றனர்.

சிப்பந்திகள் பிராவிடெண்ட் நிதித் திட்டத்தின்கீழ் இந்தியா முழுவதிலும் சுமார் 20.54 லட்

சம் தொழிலாளர்கள் பயனடைக் துள்ளனர். அத்திட்டம் 1952 நவம்பரில் அமுலுக்கு வந்தது.

தொழில்நிதிக் கார்ப்பரேஷன் 1955 ஏப்ரலிலிருந்து 1956 ஆகஸ்ட் வரையில் சுமார் 6.91 கோடிரூபாய்க்குக் கடன்தொகைகள் அனுமதித்திருக்கிறது.

1955-56ல் சுமார் 53.94 லட்சம் ரூபாய் மதிப்புள்ள 2.709 டன் கச்சா கிளிஸரைனும் சுத்திகரிக்கப்பட்ட கிளிஸரைனும் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டது.

## தமிழ்ச்சொற்கள் தொகுப்பு

சென்னை செப் 24

ஆங்கிலத்தில் நிருவாக சம்பந்தமாக உள்ள பதங்களுக்குச் சரியான தமிழ்ச் சொற்கள் கொண்ட தொகுப்பு இம்மாத இறுதிவாக்கில் 'முடிவு செய்யப்படும்' என்று சென்னை மேல் சபை அரசாங்கக் கட்சித்தலைவரான திரு. எம். பக்தவத்சலம் இன்று மேல்சபையில் கூறினர்.

இந்தத் தமிழ்ச்சொற்கள் மக்களுக்கு விளங்கக் கூடியதாக இருக்க வேண்டுமென்பதில் போதிய கவனம் செலுத்தப்பட்டிருக்கிறது என்று கூறினர்.

மற்றும்கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அமைச்சர் கூறியதாவது:

இந்தத்தொகுப்பைச் சென்னை மாகாணத் தமிழ்ச்சங்கம் தயாரித்துள்ளது. இதற்காகச் சென்னை அரசாங்கம் அதற்கு ரூ 1000 மான்யம் அளித்தது.

---

## அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பட்டமளிப்பு விழா

அண்ணுமலைநகர் செப் 24

அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் பட்டமளிப்புவிழா அக்டோபர் மாதம் 18ம்தேதி நடைபெறும். துணைவேந்தர் திரு டி எம் நாராயணசாமிபிள்ளைபட்டமளிப்புவிழா உரை நிகழ்த்துவார்.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-51
துன்முகி-புரட்டாசி-19
4-10-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்




## முல்லை

தலைவன் வினைவயிற் செல்லக் கருதியறிந்த தோழி அவன் கவலையில்லாது சென்று வினைமுடித்து வருதல் கருதி உடன்பட்டுக் கூறியது.

கோல்லைக் கோவலர் குறும்புனஞ் சேர்ந்த, குறுங்காற் குரவின் குவி யிணர் வான்பூ, வாடுடை யிடைமகன் சூடப் பூக்கு, மகலு ளாங்கட் சீறூ ராமே, யதுவே சாலுவ காம மன்றியு, மெம்விட் டகறி ராயிற் கோன்ஞென்று, கூறுவல் வாழிய ரைய வேறுபட், டிரீஇய காலை யிரி யிற், பெரிய வல்லவோ பெரியவர் நிலையே. **266**

:-கச்சிப்பேட்டு இளந்தச்சனுர்.

ஐய! நீவிர் நெடிது வாழ்வீராக. எம்மைக் கைவிட்டு வேற்று நாட்டுக்குச் செல்லுவீராயின் அப்போது யாம் கொல்லைகளிலே கோவலரது சிறிய புனத்தைச் சார்ந்த குறுகிய காம்பையுடைய குராமரத்தின் குவிந்த கொத்திலுள்ள வெள்ளையாகியபூஆடுமேய்க் கின்ற இடைமகன் அணிந்துகொள்ளும்படி பூக்கின்ற அகன்ற இடத்தையுடைய சிறிய ஊரிலே இருப்போம். அதுவே எங்கள் விருப்பத்திற்குப் பொருந்துவதாயிருக்கும். உமக்கு ஒன்று கூறு வேன். எம்மை இங்கேவிட்டுப் பிரிந்தகாலத்து யாம் வருந்தினல் பெருங்குடியிற் பிறந்தவர் நிலை பெரியவல்லவோ?

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி தன்னைச், சிவனெனவே கண்டவர்க்குச் சிவனுறைவனங்கே, யுருக்கோலி மந்திரத்தா லெனநினையு மவர்க்கு, முளனெங்கு மிலனிங்கு முளனென் பார்க்கு, விருப்பாய் வடிவாகி யிந்தனத்தி னெரிபோல், மந்திரத்தில் வந்துதித்து மிகுஞ்சுரபிக் கெங்கு, முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி, யொழுகுவது போல் வெளிபட் டருளுவனன் பர்க்கே. :சிவஞானசித்தியார் 325

உரை: 'திருக்கோயிலுள் இருக்கும் - பகுத்துணர்தலின்றி ஆலயத்தினுள்ளே எழுந்தருளியிருக்கின்ற, திருமேனி தன்னை -சிவலிங்க முதலிய திருவுருவங்களை, சிவன் எனவே கண்டவர்க்கு - சிவபெருமானெனவே தேறி வழிபடும் சரியையாளருக்கு, சிவன் அங்கே உறைவன்-சிவபெருமான் அங்கே வெளிப்படாது நின்று அருள் செய்வான், மந்திரத்தால் உருக்கோலி என-ஈசானம் முதலிய மந்திரங்களால்சிவலிங்க முதலிய திருவுருக்கோலினனெனக்கருதி, நினையும் அவர்க்கும் மந்திரநியாசத்தால் வழிபடும் கிரியையாளர்க்கும், உளன் எங்கும் இலன்-யோகியரது உள்ளங்களை இல்லங்களாக்கொண்டு வீற்றிருக்கின்ற சிவபெருமான், இங்கே உளன் என்பார்க்கும் - இத் திருமேனியிலும் உள்ளானென்று சாத்திய மந்திரங்களால் வழிபடும் யோகிகளுக்கும், இந்தனத்தின் எரிபோல் — விறகைக் கடைந்தபொழுது உண்டாகின்ற தீயைப்போல, மந்திரத்தில் -மந்திரங்களால், விருப்பாய வடிவாகி வந்துதித்தும் - அவரவர் விரும்பிய வடிவோடு அவ்வப் போதுகளில் தோன்றி நின்றும் அருள்செய்வான், அன்பர்க்கும்-மெய்யன்புடைய சிவஞானிகளுக்கும், இருஞ் சுரபிக்கு-புனிற்றுவுக்கு, எங்கும் உருக்காண வொண்ணாதபால்-அதன் உடம்பில் வேறெவ்விடத்திலும்

வெளிப்படக் காண முடியாத பால், முலைப்பால் விம்மி ஒழுகுவதுபோல் - முலையினிடத்துப் பெருகி யொழுகுவதுபோல, வெளிப்பட்டருளுவன் - அவ்வன்பே தானாய் எப்போதும் வெளிப்பட்டு நின்றுஅருள் செய்வான்' என்பதாகும்.

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் உயிர்கள் உய்யும் பொருட்டுப் பலவகைத் திருமேனிகளைக்கொண்டு எழுந்தருளுவார். மண்முதற் சிவமீறாக வுள்ள தத்துவதாத்துவிகங்களாய் நின்று அவன், அவள், அதுவெனச் சுட்டி யுணரப்பெறும், இவ்வுலகம் தோன்றநின்றழியுந் தன்மையுடையதாதலால் காரியமென்பது அநுமானித்து உணரப்பெறும். இப்பிரபஞ்சம் சித்தும் அசித்துமென இருபாற்பட்டு நிற்கும்.

இவற்றுட் சித்துப் பொருளான உயிர்த்தொகுதிகள் எதனையும் தாமே அறியாது ஒருவர் அறிவிக்க அறியுஞ் சிற்றறிவுடைமையாலும் அசித்துப் பொருளான உடம்புமுதலியவைகள் தாமே அசையமாட்டாது ஒருவர் அசைவிக்க அசையும் சடத் தன்மையுடைமையாலும் இவைகளை இயக்குங் கர்த்தாவாகிய பரம்பொருள் ஒன்று உண்டென்பது துணியப்பெறும்.

அப்பரம்பொருளே பதியென்பதும் அது அறிவிக்க அறிவதே பசு என்பதும் அசைவிக்க அசைவதே பாசமென்பதும் அறியத்தக்கனவாம். பதி என்பது காப்பது என்னும் பொருளையும் பசு என்பது பந்திக்கப்படுவது என்னும் பொருளையும் பாசம் என்பது பந்திக்குங் கருவி என்னும் பொருளையும் உடையன.

பதியிலக்கணம் பேசவந்த திருக்களிற்றுப் படியார் 'ஒன்றன் றிரண்டன் றுளதன்றிலதன்று நன்றன்று தீதன்று நானென்று, நின்ற, நிலையன்று நீயன்று நின்னறிவுமன்று, தலையன் றடியன்று தான்' என்று கூறியது- இப்படி எல்லாமாய் அல்லவாய் இருக்கும் இறை- ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாது விளங்கும் பரம்பொருள் - இப்படியன் இந்நிறத்தன் என எழுதிக் காட்டமுடியாத கடவுள், உயிர்களிடத்துவைத்தபெருங்கருணையால், அருவம், அருவுருவம், உருவம் ஆகிய திருமேனிகளைக் கொண்டு வெளிப்படும்.

'அகளமாய் யாரும் அறிவரிதப்பொருள், சகளமாய் வந்தென்

றுந்தீபற, தானாகத் தந்திதென் றுந்தீபற' என்பது திருவுந்தியார். மாற்றம் மனங்கழிய நிற்பதாகிய பதிப்பொருள், தன்னைப் பெறவேண்டுமென்று முயலுகின்ற சாதனமுடையவர்களுக்கு அவ்வவர் விரும்பிய வடிவத்திலும் இடத்திலும் காலத்திலும் வந்து அருள் செய்யுமென்பது ஆன்றோர்கள் அநுபவத்தாற் கண்டறிந்துரைத்த உண்மையாகும்.

சிவபெருமானை அடைதற்குரியார் மேற்கொள்ளும் சாதனங்கள் நான்கு. அவை சரியை, கிரியை, யோகம், ஞானமெனப் பெறும். சரியையாளர் உடம்பின் புறக் கருவிகளாலும், கிரியையாளர் அகமும் புறமுமாகிய கருவிகளாலும், யோகிகள் அகக் கருவிகளாலும் ஞானிகள் இவற்றைக் கடந்த அதீத நிலையிலும் ஆண்டவனை வழிபடுவர்.

சரியை வழிபாடு, அச்சரியையின் மேம்பட்ட மற்றை மூன்று நெறியாளர்களுக்கும் பொருந்தும். அதுபோலவே கிரியை யோக வழிபாடுகளும் அவற்றின் மேம்பட்ட நெறியாளர்களுக்கு ஏற்கும். அதனால் சாதனிகள் அனைவருக்கும் பொதுவாகப் பொருந்துகின்றவழிபாடு சரியை வழிபாடேயென்பது நினைவிலிருத்தத் தக்கதாம். அச்சரியை வழிபாட்டுக்குரிய இடம் திருக்கோயிலென்பதும் அங்கே ஆண்டவன் சிவலிங்க முதலிய திருமேனிகளில் எழுந்தருளியிருந்து வழிபாட்டை ஏற்றுக்கொண்டு பயனை வழங்குகின்றாரென்பதும் பாடலின் முதற்பகுதியில் உணர்த்தப்பெற்றது.

சிவாலயத்துள் எழுந்தருளியிருக்கும் சிவலிங்கம் முதலிய திருவுருவங்களை வழிபடும் சரியையாளர் சிவம் வேறு அத்திருவுருவம் வேறு என்னும் பேதவுணர்ச்சியின்றி வழிபடுதல் வேண்டும் அவர்க்குச் சிவபெருமான் அத்திருமேனிகளில் வெளிப்படாது நின்று அருள்செய்வார்.

கிரியையாளர் ஈசான முதலிய மந்திரங்களால் அருவப் பொருளாகிய சிவபெருமான் சிவலிங்க முதலிய திருவுருக்கொண்டானெனக் கருதிமந்திரக் கிரியைகளால் வழிபடுவர். வழிபடும் அவருக்குவிறகைக் கடைந்தபொழுது தோன்றும் தீயைப்போலச் சிவபெருமான் அத்திருமேனிகளில் வெளிப்பட்டுத் தோன்றியருள் செய்வார்.

தொண்டருள்ளங்களை இல்லமாகக் கொண்டுவாழும் இறைவன் இத்திருமேனியிலும் இருந்து பூசை கொண்டருளுவானெனக் கருதி, சத்தி சம்பந்தமான மந்திரங்களால் சிவலிங்க முதலிய திருமேனிகளை யோகிகள் வழிபடுவார்கள். இவருக்குக் கறந்த இடத்துத் தோன்றும் பால்போல எளிதில் வெளிப்பட்டுத் தோன்றி இறைவன் அருள் புரிவார். கிரியையாளருக்கும் யோகிகளுக்கும் இறைவன் வெளிப்பட்டுத் தோன்றினும், ஏதேனும் ஒவ்வொரு வேளைகளில் தோன்றுவதன்றி எப்போதும் தோன்றுவதில்லை.

ஞானிகளாயிருப்போர் இடையறாத அன்பினால் சிவலிங்க முதலியதிருமேனிகளைச்சிவமெனவே கண்டு எப்போதும் வழிபடுவார்கள், 'இறைவனை யெல்லிற் கங்குற் பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து' என்ற பரஞ்சோதி முனிவர்திருவாக்கு இங்கே நினைவுகொள்ளத் தக்கதாகும். இவருக்குப்பசுவின் வடிவம் முழுவதிலும் காணப்படாத பால் அது தன் கன்றை நினைந்த அளவில் அதன் முலையில் விம்மி ஒழுகுவதுபோல், கருணைமிகுதியால் சிவபெருமான் அவாது அன்பே தானாய் எப்போதும் அத்திருமேனிகளில் வெளிப்பட்டு நின்று அருள் செய்வார்.

சிவாலயத்தினுள் இருக்கும் ஒரு திருமேனியிலேயே சரியையாளருக்கு எப்போதும் தோன்றுதிருந்தும், கிரியையாளருக்கும் யோகிகளுக்கும் ஒரோவழித்தோன்றி யிருந்தும்ஞானிகளுக்கு எப்போதும் தோன்றியிருந்தும் சிவபெருமான் அருள் செய்வாரென்பதை ஆசிரியர் இப்பாடலில் தெளிவுபடுத்தியுள்ளமை தெரிந்து பயன் பெறத் தக்கதாகும்.

---

## தேயிலை உபயோகம்

இந்தியாவில் தேயிலை உபயோகம் 1954-55ம் ஆண்டில் சுமார் 18.3கோடி பவுண்டாக இருந்தது 1955-56ம் ஆண்டில் 20·6 கோடி பவுண்டுக்கு உயர்ந்துவிட்டது

## இரும்புக்கனி உற்பத்தி

இந்தியாவில் இரும்புக்கனி உற்பத்தி 1956ஜூன் மாதத்தில் 2,91,650 டன்னாக இருந்தது ஜூலைமாதத்தில் 3,25,360 டன்னுக்கு உயர்ந்துவிட்டது.

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

ஆனல் அம்மொழிகள் தமிழல்லாதனவா யிருந்தால் அவனுக்குக் கோபம் வருமென்பது அவர் கருத்து. அதனுல் அவர் மொழிக்கு முக்கியத்துவங் கொடுத்துப் பொருளைப் புறக்கணித்தவராகிருர். அவர் கொள்கைக்கே அது பாதகமாகும். அங்ஙனமாக எந்த மொழியிலும் அர்ச்சனை நடக்கட்டும் என்றுரே அவர். அச்சமே அதற்குக் காரணமென்பதில் ஐயம் சிறிதுமில்லை.

எந்த மொழியிலும் அர்ச்சனை செய்ய அர்ச்சகர் தெரிந்துகொள்ள வேண்டுமென்ருரவர். ஆலயங்களில் பலமூர்த்திகள் எழுந்தருளியிருப்பர். அத்தனை மூர்த்திகளுக்குந் தனித்தனி அர்ச்சனை யுண்டு. அத்தனை அர்ச்சனைகளும் சம்ஸ்கிருதத்திலேயே நடந்து வருகின்றன. ஓராலயத்தில் இருபது மூர்த்திகளிருக்கிருரெனக் கொள்க. அஷ்டோத்தரத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டால் அவ்விருபது மூர்த்திகளுக்கும் (20X108) 2160 நாமங்களாகின்றன. அர்ச்சகர் அந்த 2160 நாமங்களையும் மனப்பாடம் பண்ணியாகவேண்டும். ஒரு மொழியானுலே நாமங்கள் அவ்வளவின. 'இந்தியத் தேசீய மொழிகளின் பட்டியலின்படி 14மொழிகள் இந்தியாவின் தேசீய மொழிகளென்று சட்டம் கூறுகின்றது' (8-7-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். அவரே மேலும் 3 மொழிகளுக்குச் சிபார்சு செய்கிருர். அவையும் சட்டத்தால் ஏற்கப்பட்டால் 'அப்போது இந்திய தேசீய மொழிகளின் எண்ணிக்கை 17 ஆகும்' (8-7-55 தமிழ்நாடு) என்பதும் அவர் கூற்று. அந்த 17மொழிகளிலும் அஷ்டோத்தரம் நடப்பதாயின் (17X2160) 36720 நாமங்கள் வரும். ஒவ்வோரர்ச்சகரும் அத்தனை மொழிகளையும் எழுதவும்

படிக்கவுங் கற்று அத்தனை நாமங்களையும் மனப்பாடஞ் செய்துகொள்ள வேண்டும்- அது எந்த அர்ச்சகரால் முடியும்? வேறு எவருக்குத்தான் சாத்திய மாகும்? அர்ச்சகர் எந்த மொழியிலும் அர்ச்சனை செய்யக் கற்றுக்கொள்ள வேண்டுமெனக் கூறியவர் சென்னைராஜ்ய மந்திரியாயிருந்தவர். அவருக்குத்தான் அது கைவருமா? மாதம் ஆயிர ரூபாவுக்குமேல் சம்பளம் வாங்கி வந்த அவராலேயே அது முடியாதபோது ஐந்து ரூபாவும் பத்துரூபாவும் சம்பளம் வாங்கிக் காலந்தள்ளுகிற அர்ச்சகருக்கு அவர் இடும் அக்கட்டளை இரக்கமற்றதாகும். மேலும்ஆலயங்களில் பல மொழிகட் குரியாரும் வந்திருப்பர். அர்ச்சகர் ஒருமொழியில் அர்ச்சனை செய்யும்போது அவர் உளறுவதாகவே அங்கு சேவித்து நிற்கும் மற்ற மொழிக்காரர் நினைப்பர். ஆகலின் தாய்மொழி யர்ச்சனை அர்ச்சனையாயிராது. வெறுங் கர்ச்சனையாகவே யிருக்கும். அர்ச்சனையில் ஓதப்படுவனவெல்லாம் அவ்வத் தெய்வத்தின் நாமங்களே. அவை வேறுவேறு மொழிகளிற் பெயர்த்து ஓதப்படுமானால் உளறல் என்ற கருத்துக்களன்றி வேறெதற் கிடனாகும்? ஆலய அர்ச்சனை தெய்வ நாமங்கள் அங்கிலைக்கு வரலாமா? ஒவ்வொரு மொழிக்காரரும் மற்றெல்லா மொழிகளையுங் கற்றுக்கொள்ள வேண்டுமென அம்மந்திரி கட்டளையிடுவாரோ? அதுவும் முடவன் கொம்புத் தேனுக் காசைப்பட்ட கதையேயாகும். அதைவிட எல்லாமொழிகளின் சொந்தக்காரரும் தமக்கெல்லாம் பொது மொழியாகிய சம்ஸ்கிருதமொன்றையே கற்று அம்மொழி யர்ச்சனையைப் பொருளோடறிந்து கேட்டுச் சுகித்தல்சுலபமன்றோ? நலமன்றோ?

'தமிழ்விருப்பம் உடையவர்களுக்குத்தான் தமிழில் செய்து வைக்கவேண்டுமென்று சொல்லுகின்றோம்' (21-5-55தமிழ்நாடு) 'மக்களுக்கு விழிப்பு வந்து கேட்குங்கால் மறுக்கலாமா?...... மருந்து நோயாளிக்காகவே தவிர மருந்துக்காகவல்ல' (16-6-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். விருப்பம் விருப்பம் என்பது வெறும் பல்லவி. மக்கள் தம் மனம்போல் விரும்பலாகாது. விரும்பினால் சைவ விற்பன்னர் தக்க சமாதானங் கூறி அவ்விருப்பத்தை மாற்றவே வேண்டும். உண்மையில் அவ்விருப்பம் மக்களிடங்கிடையாது. அவர்

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி புரட்டாசி-19

## நவராத்திரி

நம்நாட்டுப் பெருமக்கள் ஒவ்வோராண்டிலும் வருகின்ற ஆடி, புரட்டாசி, மார்கழி, மாசி ஆகிய நான்கு மாதங்களையும் மக்களுக்குரிய மங்கலச் செயல்களுக்கு ஏற்றனவல்ல வேன்று ஒதுக்கி வைத்துள்ளார்கள். ஆனால்உமையம்மை தவங்கிடந்து ஆண்டவனைமணந்து கோண்ட திருநாள் ஆடிப்பூரஞ் சார்ந்த பத்து நாட்களிலும,அம்மை கோலுவிருந்து ஐயன் வெற்றி கோள்ளும் நவராத்திரிவிழா புரட்டாசித் தசமி சார்ந்த பத்து நாட்களிலும், உலக இயக்கத்திற்குக் காரணராயிருக்கின்ற கூத்தப்பெருமான் உயிர்கள் வாழ நடம்புரிகின்ற திருவாதிரை விழாவும் திருப்பள்ளியெழுச்சிவிழாவும் மார்கழித்திங்களின் நன்னாட்களிலும், அகளமாய் யாரும் அறிவரிய பரம்போருள் சகளநிட்களமாய் வந்த லிங்கோற்பவ விழா மாசிச் சதுர்த்தசிப் பெருநாளிலும் கோண்டாடப் பெறுவதை யாவரும் அறிவர்.

இவ்வாறு இறைவனது, திருவருட் பெருக்கத்தை எளிதில் தரத்தக்க நல்விழாக்கள் நிகழுகின்ற நான்கு மாதங்களையும் மக்களது மங்கலச் செயல்களுக்கு ஏற்றனவல்ல வேன்று ஏன் ஒதுக்கிவைத்தார்களேன்பது சிந்தித்து உணர வேண்டிய வோன்றுகும்.

உயிர்கள் உடம்பாற் பெறத்தக்க முடிந்த பயன், இறைவனையடைதலாகும். அம்முடிந்த பயனைப் பெறுவதற்கிடையில் துணைப்பயன்களாக நுகர்பவையே உலக போகங்களாம். சிவபோகத்தில் விருப்பங் கொண்டவர்களுக்கு உலக போகங்கள் பொருளாகத் தோன்ரு.

அச்சிவபோகத்தை நல்குகின்ற ஆண்டவன் நம்போன்ருருக்கு எளிமையாக வெளிப்பட்டு அதனை வழங்குவதில்லை. சிற்சில வேளைகளே அவனது அருள்வெளிப்பாட்டுக்கு எளிமை உடையனவாயுள்ளன. அவ்வேளைகளைக் கண்டு பிடித்து அவற்றை ஆண்டவன் வழிபாட்டுக்கென ஆக்கினர் நம் முன்னேர். அந்நல் வேளைகளைஅவனுக்கென ஆக்குதல் அறிவுடைமையாகுமேயன்றி நம் பொருட்டாக ஆக்குதல் அறிவுடைமையாகாது. இதனுலேதான் ஆடி,புரட்டாசி,மார்கழி,மாசிஆகிய ஆண்டவன் பொருட்டான மாதங்களைநம்பொருட்டாக்காது ஆண்டவன் பொருட்டாக்கிப் பெரியோர் வகுத்தனர்

புரட்டாசி மாதத்து நவராத்திரி விழா சிவபெருமானது அருள் வெளிப்பாட்டைச் சிறப்பாகக் கொண்டாடுகின்ற விழாவாகும். சத்தனுயிருக்கும் சிவபெருமான் அருவத் திருமேனி நான்கையும் உருவத்திருமேனிநான்கையும் அருவுருவத்திருமேனி ஒன்றையும் நம் பொருட்டாகக் கொள்ளுவான். அவ்வொன்பது நிலைகளிலும் அவனுக்கு ஒன்பது சத்திகளுண்டு. அவருள் நால்வர் உருவச்சத்திகள். அவரை மகேசுவரி, உமை, திரு, வாணி என்று அழைப்பர்.

படைத்தல்- காத்தல் - அழித்தல் ஆகிய உடல்பற்றிச்செய்யும் ஆண்டவனது முத்தொழில்களுக்கும் முறையே வாணி, திரு, உமை ஆகியோர் சத்திகளாயிருப்பர். அம்மூவரையும் நவராத்திரி விழாவில் கொலுவிருத்திக்கொண்டாடி முடிவில் மகேசுவரமூர்த்தியின் வெற்றி விழாவில் நாம் இன்புறுகிறேம். நாளை நவராத்திரிவிழாத் தொடங்குகிறது. வெற்றி நம்மதாகுக.

---

[7பக்கத் தொடர்ச்சி)

பெயரைச் சொல்லி எதிரிகளை ஏமாற்றப் பார்க்கிறார் நவீனர். அவர் கூட்டத்தைச் சேர்ந்த பத்துப்பேர் கத்தினால் அது மக்கள்குர லாய்விடுமா? அவரிடமிருப்பது விழிப்போ, உறக்கமோ; அவரையெதிர்ப்பவர் தூங்கவில்லை அறிவோடு கூடிய விழிப்போடிருந்துதான் தமிழர்ச்சனையை மறுக்கின்றனர். வழிபாடு மக்களுக்காகவேதானென்றார் நவீனர். அது சரி. ஆனால் வழிபாட்டு முறையை மக்களின் விருப்பம்போலெல்லாம் மாற்றலாமா? அஃகாதென்பதற்கு அந்நோயாளித் திருட்டாந்தமே போதும். மருந்து நோயாளிக்காகவேதானிருக்கிறது. ஆனல் அவன் விரும்பும் மருந்தைச் கொடுத்தால் நோய் நீங்காது, அவனுயிர்தான் நீங்கும். வைத்திய சாத்திரத்தில் வல்ல வைத்தியன் அச் சாத்திரத்தில் வகுத்த முறைப்படிதான்மருந்து கொடுக்கவேண்டும். அப்போது தான் நோய் நீங்கும். பொது மக்களைக் கலந்து அவரதபிப்பிராயப்படி சிகிச்சை செய்யப்பட்டாலும் நோயாளி தொலைந்தவனே. பொதுமக்களபிப்பிராயம் சர்வசக்தியுடையதெனக் கருதுவதுமயக்கம். 'வெளித்தோற்றத்திலும் பழக்கத்திலும் அடிமைப்பட்டு மலரும் மணமும் இல்லா மாலைகளைப்போடுகிறோம். இது ஒன்றே நமது பழக்கம். நமது மூதாதைகளினின்றும் எவ்வளவு தாழ்ந்து வந்துள்ளோம் என்பதைக் காட்டவில்லையா' (27-6-55 தமிழ்நாடு) 'தமிழகமெங்கணும் உள்ளங்கள் நஞ்சிற் கிரையாதலையே காண்கிறோம்......இலாபத்தை அடிப்படையாகக் கொண்டே இக்கால இலக்கியங்கள் எழுகின்றன. ....சிறந்த காவியங்கள் கூடத் தவறான விளக்கங்கட்குட்படுத்தப் பெறுகின்றன...இக்கால எழுத்தாளர்களும் பேச்சாளர்களும் நல்ல பெரும் இலக்கியங்களையெல்லாம் தள்ளிவிடுகின்றனர். ஏளனம் செய்கின்றனர்......தற்காலத்தவர் இலக்கியங்களையே பழிக்க முற்பட்டுவிட்டது வருந்தத் தக்கதே. இதைக்காட்டிலும் வேறு கொடிய நிலை இருக்கமுடியாது...கலைகள் இக் காலத்தில் பொருள்சேர்க்கும் நோக்கம் கொண்டவர்கள் கையில் சிக்கி விட்ட(ன)...கலைஞன் கலை அளிக்கும் ஒளியை விடுத்து காலத்திற்கேற்ப நிலை குலைந்து அலைகிறான்' (11-7-55தமிழ்நாடு)

(தொடரும்)

## ஸ்ரீ சத்தியஞானதரிசினிகள் பாடசாலை

கிழக்கல்லூரி செப் 14-

பெருங்குளம் செங்கோல்மடம் ஆதீனத்தின் புராதன இருப்பிடமான கல்லூரில் அவ்வூர்ப் பொதுமக்கள் வேண்டுகோளின்படி ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தர சத்திய ஞானபரமாசாரிய சுவாமிகள் அவர்களால் ஆரம்பப் பாடசாலை நிறுவப்பெற்று நெல்லை ம தி, தா. இந்துக் கல்லூரி வித்துவான் கு அருணசலக்கவுண்டர் அவர்களால் திறந்துவைக்கப்பட்டது.

ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களுக்குப் பொதுமக்களால் பட்டினப் பிரவேசம்செய்து வைக்கப்பட்டது. வீடுகள் தோறும் திருக்கண் சாத்தப்பட்டது.

வித்துவான் கு அருணசலக் கவுண்டர் தலைமையில் ஆதீன வித்துவான் அண்ணாவி இராமகிருஷ்ணன் உள்படப்பல பேரறிஞர்கள் சமயச் சொற்பொழிவு செய்தனர். மகாசந்நிதானம் அருளாசி கூறுகையில் கல்வியின்முக்கியம் பற்றியும் சமய உண்மைபற்றியும் சொல்லி அவ்வூர்ப் பொதுமக்கள் கல்வி விஷயத்தில் முன்னேறவந்ததைப்பாராட்டிநீண்ட விரிவுரைநிகழ்த்தினர்கள். பஞ்சாயத்துபோர்டு தலைவரால் மலர் மாலை அணிவிக்கப்பட்டு ஆதீனம் ஓதுவாமூர்த்தி திருப்புகழ் பாடக் கூட்டம் இனிது முடிந்தது.

## சென்னையில் சப்பான் பேராசிரியர்

சென்னை செப் 29-

'சம்ஸ்கிருத மொழியில்இரண்டாயிரம் ஆண்டுகளின் வரலாறு உள்ளது. இம்மொழியை இன்னும் ஆண்களும், பெண்களும் பயின்று பரம்பரையாகப் பாதுகாத்துவருகிறார்கள். இது வியக்கத்தக்கதாகும்' என்று சப்பான் புத்த பல்கலைக்கழகப் பேராசிரியர் ஹிடியோ கிமுரா இன்று இங்கு கூறினர்.

குப்புசாமிசாஸ்திரி ஆராய்ச்சி நிலையம் நிறுவப்பட்ட நாள் கொண்டாட்டத்தில்பேராசிரியர் கிமுரா பேசினர். அவர் மேலும் கூறியதாவது:

'ஏராளமான பயன்தரத் தக்க நூல்களைவெளியிட்டு இந்நிலையம் நாளுக்குநாள் முன்னேறிவருவதுகுறித்துப் பாராட்டுகிறேன். சப்பானில் 15 பல்கலைக் கழகங்களில் இந்தியமொழித்துறைகள் உள்ளன.

# அடிகளாருக்கு அடுக்குமா?

(வீரசிவம்)

24-9-56 தமிழ்நாடு, தினமணி செய்தித் தாள்களில் ஈ. வே. ராவுக்குக் குன்றக்குடி அடிகளார் பொன்னுடை போர்த்தியிருப்பதாக வந்த செய்தியைக் கண்டு வியப்படையவில்லை. ஏன்? கொஞ்சகாலமாகவே, அருள்நெறிக்குப் புறம்பான கொள்கையுடைய கருஞ்சட்டைத் தலைவர்களான ஈரோட்டுப்பெரியார், காஞ்சிபுர அண்ணாத்துரை முதலியவர்களோடு "நெருங்கியஉறவு" கொண்டு திருமடத்தில், பூர்ணகும்பம் வைத்துக் குன்றக்குடி அடிகளார் வரவேற்றுவருகிறார்களல்லவா?

அருள்நெறித் திருக்கூட்டம் துவங்கப்பெற்ற அன்று, குன்றக்குடித் திருமடத்தில் கூடியிருந்த திருக்கூட்டச்செல்வர்களான பண்டிதமணி கதிரேசச்செட்டியார், சா. கணேசன், ஈரோடு மீனாட்சிசுந்தரமுதலியார், சென்னை சச்சிதானந்தம்பிள்ளை, பாலகவி இராமநாதன்செட்டியார், திருவாசகமணி பாலசுப்பிரமணியம், சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் சுப்பையாபிள்ளை, சி எம் இராமச்சந்திரன்செட்டியார், பழநி ஈசான சிவாசாரியர், வள்ளல் மெய்யப்பசெட்டியார், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் முதலியோர்கள் முன்னிலையில், அவர்களில் பலர் உள்ளம் கொதித்துப் பேசிய சொற்களை இப்பொழுது நினைத்தாலும் நெஞ்சு சுடும்.

காரணம்? ஈ. வே. ரா. "தெய்வத் திருவுருவங்களை உடைப்பேன்" என்று வீராப்புப்பேசி அறிக்கை வெளியிட்டதுதான்! ஈ. வேராவின் விபரீதப்போக்கைக் கண்டிக்கவும், சமய விழிப்பு ஊட்டவும். அருட்பணிசெய்யவும் அன்று அருள்நெறித் திருக்கூட்டம் பிறந்தது. தமிழகம் எங்கணும் கிளைகள் தோன்றின. சமயஉலகில் புத்துணர்ச்சி பரவியது. அடிகளார் காற்றினும் விரைந்து விழிப்பூட்டினர். மக்கள் சமயக்கூட்டங்களுக்குப் பல்லாயிரக்கணக்கில் கூடினர். இன்று; அருள்நெறித் திருக்கூட்டத் தந்தையாகிய குன்றக்குடி அடிகளார் ஈரோட்டுப் பெரியாருடன் கூடிமகிழ்வது, வெண்ணெய் திரண்டுவரும்போது பானை சிறியது போல் ஆய்விட்டது.

தேசியக்கொடியை எரிக்கமுனைந்த 'வீரர்' ஈ-வே-ரா. தெய்வத் திருவுருவங்களையும், திருமடங்களையும் ஒழித்துக்கட்ட வேண்டு மென்று திட்டம் தீட்டும் 'தீரர்' அவர். அவருக்குக் குன்றக்குடி மடாதிபதி தமது திருக்கரங்களால் பொன்னடை போர்த்தியிருக் கிறார். [அன்று கண்ணகிபத்திரிகையில் 'பொன்னடை என்பது குன்றக்குடியார் தயார் செய்யும் ஒருவகைத்துணி' என்று எழுதி யது நினைவுக்கு வருகிறது]

ஈ-வே-ரா தமது போக்கில் ஒரு அங்குலம்கூட மாறினதாகத் தோன்றவில்லை. அப்படி இருக்கும்போது திருவண்ணமலை ஆதீன மடாதிபதி ஈரோட்டுப் பெரியாருடன் குலவுவது ஏனோ?

ஆன்மா சார்ந்ததன் வண்ணம் ஆகும் என்பது சைவ சித்தாந்தமல்லவா? பொன்னடை போர்த்திக்கொண்ட ஈ-வே-ரா 'எனக்கும் குன்றக்குடி அடிகளாருக்கும் அடிப்படையான கருத் தில் வேறுபாடு கிடையாது. இருவரும் ஒரே கொள்கைதான் கொண்டிருக்கிறோம். சமயத்தையும் சமுதாயத்தையும் சீர்திருத்த வேண்டும் என்பதுதான் அந்தக்கொள்கை. ஒரு நோயைத் தீர்க்க தமிழ்வைத்தியமுறை, ஆங்கிலவைத்தியமுறை என்று பயன் படு வதுபோல, நான் என்னுடைய குறிக்கோளை அடைய ஒரு வழி வகுத்துள்ளேன். இதுபோல குன்றக்குடிஅடிகளார் அவருடைய குறிக்கோளை அடைய ஒரு வழிவகுத்துள்ளார். வழிவேறு. ஆன லும் போய்ச்சேரும் இடம் ஒன்றுதான்!' என்றுபேசியிருக்கிறார்.

குன்றக்குடி அடிகளார் சமயநிலையத்தலைவர். ஈ-வே-ராவோ அரசியலில் ஒரு கட்சித்தலைவர். ஈ-வே-ராவின் கொள்கை அடிக ளாருக்குப் பிடித்தமானதாக இருக்கிறதா? தனிப்பட்ட நிலையில் யாருக்கும் தமது போக்குப்போல் எதையும் செய்ய உரிமைஇருக்க லாம். அடிகளார் திருவண்ணமலை ஆதீனகர்த்தர் என்றுகொண்ட கோலத்திற்கும்அருள்நெறித்திருக்கூட்டநிலையானதலைவர்என்பதற் கும்இப்பாராட்டுக்கூட்டத்தில்தலைமைதாங்கிப்பொன்னடைபோர்த் திப் பொற்பதக்கமும் வழங்கியது பொருந்துமா? இதை விளக்கி அருளுமாறு அடிகளாரையும் அருள்நெறித் திருக்கூட்டத் தலை வர் திரு, ஐ. ஏ. சிதம்பரம்பிள்ளை அவர்களையும் செயலாளர்களான திரு, சா. கணேசன் அவர்களையும் திரு, எஸ். மீனட்சுந்தர முதலியார் அவர்களையும் மிகப்பணிவோடுவேண்டிக்கொள்கிறேன்.

# குற்றவாளி

(சித–சேதுராமன்)

(முன் தொடர்ச்சி)

தந்தையும் மகனும் சேர்ந்து ஒன்ருகப் படம்பிடித்துக்கொண் டனர். வீட்டிற்கு வரும்வழியில் பிஸ்கட் வாங்குவதற்காகப் பாண்டியனைக் கீழே இறக்கிவிட்டுக் கடைக்குள் சென்று திரும்பிய நடராசன் சுற்றுமுற்றும் பார்த்தான். பாண்டியனைக் காணவில்லை.

எங்குதேடியும் என்ன பயன்? பாண்டியன் கிடைக்கவில்லை. நகரில் காலடிபடாத இடமே கிடையாது. பாவம் என்ன செய்வான்! தள்ளாடியபடியே வீடு வந்து சேர்ந்தான் நடராசன்.

ஃ ஃ ஃ

'ஐயா! வயிறு பசிக்குது' என்று ஓடு ஏந்தியவண்ணம்ஒருவர் நின்றுகொண்டிருந்தார். நடராசன்தான் அவர்.

'இந்தாப்பா' என்று ஒரு பெரியமனிதர் நான்கணு நாணயத்தை அவனிடம்கொடுத்தார். அந்த மனிதருடன் பாண்டியன் இருந்தான். சிறுவன் பாண்டியன நல்ல-வாலிபன் பாண்டியனுகத் திகழ்ந்தான் அவன். காலம் மாற்றிவிட்டது.

'பாண்...' அதற்குமேல் நடராசன் கூறவில்லை. அவன் நன்ருக வாழ்ந்தால் போதும், நான் அவன்வாழ்வில் குறுக்கிட வேண்டாம் என்ற எண்ணமே அவன்மனதில்உதயமாயிற்று.

'அப்பா! வீட்டிற்குப் போகலாமே.' என்று கூறினுன் அப் பெரியமனிதரைப்பார்த்து. பதினைந்து ஆண்டுகளாக வளர்க்கும் தந்தை அவர்தானே. இருவரும் சென்றுவிட்டனர்.

ஃ ஃ ஃ

'பார்வதி! நம்ம பாண்டியன் திருமணத்தைக் கூடிய விரைவிலேயே முடித்துவிடவேண்டும்' என்ருர் சுந்தரலிங்கம்பிள்ளை.

'ஆமாம்... அவனுக்கும் வயது வந்துவிட்டதல்லவா. அந்த வைபவத்தைக் காண அவன் பெற்றோர்களிருந்தால்.........'

'உன்னிடம் ஒன்று கூற மறந்து விட்டேனே! இன்று கடைவீதிக்குச் சென்று திரும்பும்பொழுது பாண்டியனின் தந்தையைக் கண்டேன்'

'பாண்டியன் நம்மிடம் கிடைத்த மறுநாளே தினத்தாள்களில் பாண்டியனும், நடராசனும் எடுத்த புகைப்படத்தை வெளியிட்டுப் பாண்டியனைக் கண்டு பிடிப்பவர்களுக்குப் பரிசளிப்பதாக வெளியிட்டிருந்தான் நடராசன். பிள்ளையில்லாப் பாசமே பாண்டியனைக் காட்டிக்கொடுக்காது போயிற்று. பாவம். நடராசன் பிச்சைக்காரனாக மாறிவிட்டான்' சுந்தரலிங்கம்பிள்ளையின் கண்களிலிருந்து கண்ணீர் சிந்தியது. இவர்கள் பேசிக்கொண்டதையெல்லாம் மறைவிலிருந்து கொண்டு கவனித்த பாண்டியன் 'அப்பா' என்று கூறியவண்ணம் காரை எடுத்துக்கொண்டு தன் தந்தையை அழைத்துவர வேகமாகச் சென்றான்.

'ஐயோ' என்ற அலறல் அவனைத் திகைக்கச்செய்தது. வண்டியின் பிரேக் கைப்பிடித்துவிட்டு ஓடிவந்து கீழே நோக்கினான். 'அப்பா!' என்று அலறுவதைத் தவிர வேறொன்றும் கேட்கவில்லை. யாரை ஆவலுடன் அழைத்துவரவந்தோனோ- அவர் மாண்டுகிடந்தார். நடராசன் கையிலிருந்த புகைப்படம் சிறிது தூரத்தில்போய் விழுந்துகிடந்தது.

பாண்டியன் இப்பொழுது தந்தையைக்கொன்றுவிட்டுத் தவிக்கும் மகனல்ல கொலை செய்த குற்றவாளி ஆம். அவன் சட்டப்படி குற்றவாளிதானே. சட்டம் அவனைச் சிறைக்கூடம் நோக்கி அழைத்தது.

---

## புகையிலை ஏற்றுமதி

இந்தியப் புகையிலை 32 நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வருகிறது. இதன் மூலம் ஆண்டு தோறும் சுமார் 12 கோடி ரூபாய்க்கு வெளிநாட்டுச் செலாவணி கிடைத்து வருகிறது.

---

## திரு-தமிழக கோவில்கள் நிருவாகம்

சென்னை செப் 29

சென்னை மாகாணத்துடன் இணையப்போகிற திருவாங்கூர்-கொச்சி தமிழகப் பகுதிகளில் உள்ள கோவில்கள் தற்போதைக்கு அவை சம்பந்தப்பட்ட திருவாங்கூர்-கொச்சி சட்டங்களின்படிநிர்வகிக்கப்படும்என்று சென்னை மேல்சபையில் இந்து அறநிலையப் பாதுகாப்புத்துறை அமைச்சர் திரு, பரமேசுவரன் கூறினார்.

இந்து அறநிலையங்கள் சம்பந்தமான சென்னை மாகாண சட்டவிதி முறைகளின் கீழ் இந்தக் கோவில்களையுங்கொண்டு வரச் சென்னை அரசாங்கம் ஒரு சட்டம் இயற்ற இயலும் என்று அமைச்சர் கூறினார்.

திருவாங்கூர் தேவஸ்தானக் குழுவின் சொத்துக்கள் சென்னை கேரளம் ஆகிய மாகாணங்களுக்கிடையே 13.5, 37.5 என்ற விகிதத்தில் பிரித்துக் கொள்ளப் படும் என்று அமைச்சர்கூறினார்.

## புதிய பல்கலைக் கழகங்கள்

சென்னை செப் 28-

கோவையில் ஒரு பல்கலைக்கழகமும் காரைக்குடியில் ஒரு பல்கலைக் கழகமும் ஏற்படுத்தும் திட்டம் அரசாங்கத்தின் முன் உள்ளது என்று சென்னை மேல் சபையில் அமைச்சர் திரு பக்தவத்சலம் கூறினார்.

காரைக்குடியில் உள்ள கல்லூரிகளை ஒன்று சேர்த்து மத்திய அரசாங்கத்தின் நிருவாகத்தின்கீழ் ஒரு மத்திய பல்கலைக் கழகமாக அமைக்குமாறு மத்திய அரசாங்கத்திற்கு டாக்டர் திரு, அழகப்பசெட்டியார் எழுதியிருக்கிறார். கோவையில் ஒரு பல்கலைக் கழகம் தொடங்கவேண்டும் என்று கோவை பிரமுகர்கள் சிலர், அரசாங்கத்திற்கு மனு அனுப்பியுள்ளனர். இந்த விஷயம் அரசாங்கத்தின் ஆலோசனையில் இருந்து வருகிறது என்று அமைச்சர் கூறினார்.

---

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-52
துன்முகி-புரட்டாசி-26
11-10-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

## நற்றிணை - தெளிவுரை

### நெய்தல்

தலைவியின் வேற்றுமை கண்டு அவளை இல்வயிற்செறித்த காலத்துக் காமமிகுதியால் வருந்திய அவளை ஆற்றப் புகுந்த தோழி கூறியது.

நொச்சி மாவரும் பன்ன கண்ண, வெக்கர் ஞெண்டி னிருங்கிளைத்
தொழுதி, யிலங்கெயிற் றேஎ ரின்னகை மகளி, ருணங்குதினை துழவுங்
கைபோன் ஞாழன், மணங்கமழ் நறுவீ வரிக்குந் துறைவன், தன்
னொடு புணர்த்த வின்னமர் கானற், றனியே வருத னனிபுலம் புடைத்
தென, வாரேன் மன்யான் வந்தனென் றெய்ய, சிறுநா வொண்மணித்
தெள்ளிசை கடுப்ப, வினமீ னார்கை யீண்டுபுள் ளொலிக்குர, லிவை
மக னென்னு வளவை, வயமான் றோன்றல் வந்துநின் றனனே -267

நொச்சியினது கரிய அரும்புபோன்ற கண்ணையுடைய மணலெக்கரிலேயுள்ள பெரிய சுற்றத்தையுடைய ஞெண்டின் கூட்டம்விளங்கிய பற்களையும் அழகிய இனிய நகையையுமுடைய பெண்கள், வெய்யிலிலே காயுந் தினையைக் கைவிரலால் துழாவி வருதல் போல மணம் வீசுகின்ற ஞாழலினது நல்ல மலரைக் காலால் வரித்துக் கோலஞ் செய்கின்ற துறையையுடைய தலைவனோடு கூட்டி வைத்த இனிய விருப்பத்தையுடைய கழிச்சோலையில் தனியே நான் வருவது மிக வருத்தமுடையதாயிருக்கின்றதென வாராதிருந்த யான் ஒருநாள் வந்துளேனாகிச் சிறிய நாவையுடைய ஒள்ளிய மணியின் தெளிந்த ஓசையைப்போலக் கூட்டமாகிய மீனைத் தின்னுதற்கு வந்து கூடுகின்ற புள்ளொலிக்குங் குரலைக்கேட்டு, இவ்வோசை தலைமகன் என்று சொல்லிய பொழுது வலியகுதிரையையுடைய தோன்றல் அங்கு வந்து நின்றான். :பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

காலே யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூர னெல்லினன் பெரிதென
மறுவருஞ் சிறுவன் றாயே
தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே.

:- குறுந்தொகை —45

உரை: 'காலை எழுந்து-காலைப் பொழுதிலே புறப்பட்டு, கடும் தேர் பண்ணி - வேகமாகச்செல்லுகின்ற தேரை ஏறுதற்கேற்றதாக அமைத்து, வால் இழை மகளிர் - தூய்மையாகிய அணிகலன்களை அணிந்தபரத்தையரை, தழீஇய சென்ற-தழுவும் பொருட்டுச் சென்ற, மல்லல் ஊரன்-வளம்பொருந்திய ஊரையுடையவனாகிய தலைவன், பெரிது எல்லினன் என - மிக்க விளக்கத்தையுடையவனென்று, சிறுவன் தாய் - ஆண்மகவைப் பெற்றவளாகிய தலைவி, மறுவரும்-அவனை ஏற்றுக்கொள்வாளாயினும் மனமயக்கத்தை அடைவாள், இத் திணைப் பிறத்தல்-தலைவன் செயலை மறந்து வாயில் நேர்தற்குரிய இக்குடியிற் பிறத்தல், தெறுவது - துன்புறுத்துவதே' என்பதாகும்.

சங்க இலக்கியங்களாகிய எட்டுத் தொகைநூல்களில், இரண்டாவதாக வைத்தெண்ணப் பெறுவது குறுந்தொகை நானூறு பாடல்களையுடைய இந்நூலில் ஆலங்குடி வங்கனார் என்னும் புலவர்பெருமான் இயற்றியனவாக இரண்டு பாடல்கள் உள்ளன. அவை 'கழனிமாத்து' என்று தொடங்கும் எட்டாவது பாடலும் மேலே காணப்பெறுகின்ற நாற்பத்தைந்தாவது பாடலுமாம்.

'தலைவி தன்னை இகழ்ந்து கூறினாளென்று அறிந்த காதற்

பரத்தை அத்தலைவியின் அருகி லுள்ளோர் கேட்கும்படி 'தலைவன் எங்களுக்கு வயப்பட்டவன் போல இங்கேயிருந்துவிட்டுத் தலைவிபாற் சென்று அவளுக்கு அடங்கி அவள் விரும்பும்படி ஒழுகினான் தருக்குற்று அவள் என்னை இகழ்ந்ததற்குக் காரணம், அவனது இவ்வொழுக்கமே போலும்!' என்று காதற் பரத்தை கூறியதாக எட்டாம் பாடலை அமைத்த இவ்வாசிரியர் 'பரத்தையர் பாற் சென்ற தலைவன் விட்ட தூதுவர், தலைவியில்லம் சென்று அவளது உடம்பாட்டை வேண்டியபொழுது அவள் உடம்பட்டாளென்பதை அறிந்து, தோழி' தலைவனது கொடுமை தன்னைத் துன்புறுத்தவும் அதனைப் பொருட்படுத்தாமல் உடம்படுதற்குரிய இக்குடியிற் பிறத்தல் மிகக் கொடியது என்று குறிப்பினால் தெரிவித்ததாக நாற்பத்தைந் தாம் பாடலை அமைத்துத் தந்துள்ளார்.

இவ்விரண்டு பாடல்களுமே தலைவனின் புறத்தொழுக்கத்தை அடிப்படைப் பொருளாகக் கொண்டு ஆக்கப்பெற்றன எனினும், இரண்டும் உயர்ந்த நீதிகளை எடுத்துக் காட்டுகின்றன வென்பது உணரத்தக்கதாகும். பரத்தை கூற்றுப் பாடலில் இல்லக்கிழத்தியை அவள் புறனுரைத்தாளென்று சொல்லி 'யார் யாரை எவ்வெவ்விடங்களில் வைக்கவேண்டுமோ; அவரவரை அவ்வவ்விடங்களில் வைக்காமல், உயர்ந்தோரைத் தாழ்ந்த இடத்திலும் தாழ்ந்தோரை உயர்ந்த இடத்திலும் வைப்பதால் கேடுவிளையும்' என்பதைப் புலப்படுத்தினர்.

தோழி கூற்றுப் பாடலில் 'உயர்குடியிற் பிறந்த கற்புடை மகளிர், தம் தலைவர் கொடுமை புரியினும் அதனை மறந்து அன்பு பாராட்டுவர்' என்பதைத் தெளிய வைத்துள்ளார். இவ்வாறு உலகியல் நிகழ்ச்சிகளைக் கூறும்போது, உயர்ந்த உண்மைகளையும் உடனாகப் புலப்படுத்துவதென்பது, தொல்லாசிரியர் எல்லாரிடமும் இயல்பாய் அமைந்திருந்தது.

எக்காலத்தும் எவ்விடத்தும் ஞானத்தானும், ஒழுக்கத்தானும், ஆள்வினையானும், பொருளினானும், குணத்தானும், உருவினானும், திருவினானும் தன்னோடு ஒத்தாரும் மிக்காருமில்லாது பொருவிலனாய் விளங்குந் தலைவனும், அன்னதகுதியையே

உடையவளாய் நின்ற தலைவியும் தமியராய் ஒரு பொழிலகத்து எதிர்ப்பட்டுத் தம் முணர்வின ரன்றி வேட்கைமிக்குப் பிறரறி யாது கூடி மகிழ்வார்கள். இயற் கைப் புணர்ச்சியின் பின்னர் வழக்கமாக நிகழுா் நிகழ்ச்சிகளை யனைத்தும் ஒருவாறாக நிகழ்ந்து முடியும். கற்பு மணம் பூண்ட தலைவி, தலைவனது மாளிகைக்கு வந்து இல்லறம் நடத்திக்கொண் டிருப்பாள்.

கற்புக் காலத்துத் தலைவியைப் பிரிந்து தலைவன் புறத்தே சென்று வரவேண்டிய இன்றி யமையாமை நிகழும். அவ்வாறு தலைவன் பிரியும் பிரிவு கல்வி காரணமாகவும், நாடு காத்தற் பொருட்டும் இருவர் அரசர் தம் மிற்பொர நின்றவிடத்து அவ ரைச் சந்து செய்வித்தற்கும், அரசர்க் குற்றுழியும், பொருள் ஈட்டுதற்கும், புறப் பெண்டிர் பாலுமாக ஆறு வகையில் நிக ழும். இதனை 'ஓதல் காவல் பகை தணிவினையே, வேந்தர்க் குற்றுழி பொருட்பிணி பரத் தையென், றாங்க வாறே யவ்வ யிற் பிரிவே என்று இறையனாரக கப்பொருள் அறிவிக்கின்றது.

இவற்றுள் முதலிற் கூறப் பட்ட ஓதற்பிரிவும் காவற்பிரி வும் முறையே அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் ஆகிய நால்வ ருக்கும், வேந்தர்க் குற்றுழிப் பிரி வும் பொருட்பிணிப் பிரிவும் வணிகர் வேளாளர்க்கும் பரத் தையிற்பிரிவு எல்லாருக்கும் உரி யனவாம். 'காதற் பரத்தை எல் லார்க்கு முரித்தே' என்பார் இறையனார்.

இந்த முறையில் தலைவியைப் பிரிந்து தலைவன் பரத்தையர் பால் இன்பம் நுகர்தல் கருதிச் செல்லுவான். அதற்குத் தலைவி பிணங்குவாள். தன்னைப்பிரிந்து பரத்தையரின்பத்தில் விருப்பங் கொண்டு தலைவன் சென்றதை நினைந்து தலைவி பலவாறாகத் துன்புறுவாள். அவளது துன் பங்கண்ட தோழி அதற்குக் காரணம் யாதென அவளிடம் கேட்க, அவள் தலைவனது புறத் தொழுக்கத்தைப் பற்றி அவளுக் குச் சொல்லி அவன் குறையை உணர்த்துவாள், கேட்ட பாங்கி 'தலைவரது குற்றத்தைக் கூறு தல் கற்புடைமைக்குத்தகாது' என்று இடித்துரைப்பாள்.

பரத்தையர் வீட்டிலிருந்த தலைவன் தலைவியின் பூப்புச்செய் தியை அறிந்து தன் வீட்டிற்கு வருவான். தலைவி அவன் செய்த

பிழையை மறந்து அவனை எதிர் கொண்டு பணிய இருவரும் அளவளாவி இன்புறுவார்கள். 'பூப்பின் புறப்பாடீராறு நாளும், நீத்தகன் றுறையா ரென் மனார் புலவர், பரத்தை யிற் பிரிந்த காலை யான' என்பது தொல்காப்பியம்.

சிலநாட்களில் மீண்டும் தலை வன் பரத்தையர்பாற் சென்று, சிலபொழுது அவர்கள் வீட்டில் தங்கியிருந்து, தலைவியை அடைய நினைந்து பாணன் முதலியோ ரைத் தலைவிபால் தூதுஅனுப்பு வான். முதலில் அத்தூதுவரிடம் சினங்கொண்டு வாயில் மறுத்த தலைவி பின்னர் ஒருவாறாகத்தலை வன் வரவுக்கு உடம்படுவாள், அவ்வாறு தலைவியினது உடம் பாட்டை அறிந்த தோழி அந்த நற்செய்தியைத் தலைவனுக்கு அறிவிப்பதிலேயே அவனது கொடுமையையும் மறவாது புலப் படுத்தினளென்று ஆசிரியர் இப் பாடலில் தெரிவிக்கின்றார்.

'தலைமகனால் தலைநின்று ஒழு கப்படுவன தருமம், அருத்தம், காமம் என மூன்று. அம்மூன்றி னையும் ஒருபகலை மூன்று கூறிட்டு முதற்கூட்பத்து நாழி கையும் அறத்தொடு படச்செல் லும். இடையன பத்து நாழிகை யும் அருத்தத் தொடுபடச் செல்லும். கடையன பத்துநாழி கையும் காமத்தொடு படச்செல் லும் என்பது நக்கிரனார் உரை. இங்கே தலைவனைக் காலையி லெழும் சிறப்புடையவனாகக் காட்டி அவ்வேளைக்குரிய அறத் தொடு படாத செயலுடையவ னாகவும் சொல்லிய நயம்அறிந்து மகிழுதற்குரியதாகும்.

'கடுந்தேர்' என்பதில் அவன் பரத்தையரின்பர் துய்ப்பதில் மேற்கொண்ட விரைவு புலப் படுகின்றது. வாலிழை மகளிர் என்பதில், இயற்கை யழகைவிட அணிகலம்ஆடை முதலியவற்றால் வருகின்ற செயற்கையழகையே பெரிதும் உடையவர் பரத்தைய ரென்பதும், அவரது இழை தூயதேயன்றி அவர் தூயரல்ல ரென்பதும் அறியப் பெறுகின் றன.

'தழீஇய சென்ற' என்பதில் அவன் விரும்பித் தழுவுதலல் லது அவர் உள்ளத்தோடு தழு வாமை தெரிகின்றது. மல்லல் ஊரன் என்று பரத்தையருக்குக் கொடுக்கும் பெருஞ் செல்வம் தலைவனுக்கிருப்பதை அறிவித் தார். சிறுவன் தாய் மறுவரும் என்று கூறி அன்புசெய்தற் குரிய மனைவி, மகன் ஆகிய

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

'பாரியும் காரியும் தமிழ்நாட்டில் பிறந்தவர்கள்தான் என்று கூறக்கூட முடியாத அளவு தமிழனின் நிலை தாழ்ந்துவிட்டது....மனிதன் இந்தக் காலத்தில் சுயநலப் பாதையில் வாழத் தொடங்கிவிட்டான்' (13-8-55 தமிழ்நாடு), 'இதை (தமிழகத்தை) எந்த ஆசிரியனும் குறைத்து மதித்துவிடவில்லை. ஆனால் நிகழ்காலத்தைப் பற்றி சிறிது தரம் குறைத்தே மதிப்பிடவேண்டியதிருக்கிறது' (20-8-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். இவ் வாக்கியங்களால் இக்காலத்துத் தமிழரின் அறிவு நிலை இப்படிப்பட்டதெனக் காட்டப்பட்டது. விழிப்பு வந்துவிட்டதாகச் சொல்லப்படும் மக்கள் அத்தமிழராய்த்தானிருக்க முடியும் அவரறிவே அங்ஙனமாயின் ஏனைச் சாமானியர் தாத்தை ஒருவர் சொல்லியா மற்றவர் தெரியவேண்டும்? அங்ஙனமாக அன்னாரபிப்பிராயம்மதிப்புப் பெறுவதலெப்படி? விஷயந் தெரியாதவன் விழிக்கிற விழிப்பும், அவருக்கு வந்து விட்டதாகக் கூறப்படும் விழிப்பும் ஒன்றே. ஆகவே நோயாளிவைத்திய சாத்திரத்துக்கும் வைத்தியனுக்கும் அடங்கி நடக்கவேண்டுவது போலச் சைவமக்களும் சைவ சாத்திரத்துக்கும் சைவாசிரியருக்கும் அடங்கியே நடக்க வேண்டும். அடங்காப்பிடாரியான நோயாளிக்கு நோய் தீராது வளர்வதுபோல் அடங்காப்பிடாரிகளான சைவமக்களுக்கு ஆணவத்திமிர் தீராததோடு மிகுவதுந் தப்பாது.

'தமிழ்மொழி வழிபாட்டை எதிர்ப்பவர்களும் மறுத்துப் பேசுபவர்களும் அதனை ஆதரிக்கவேண்டாம். வரவேற்றுப் பேசவேண்டாம். இதனைஎதிர்த்துப் பேசாமல் இருந்தால்போதுமானது' (8-7-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். ஒருவன்

சைவசாத்திரங்களிற் சிறிதே பயிற்சி பெறுக தமிழர்ச்சனைக் கொள்கை சாத்திர விரோதமென்பது அவனுக்கு நிச்சயமாகப் புலப்படும். தான் நெஞ்சுரமில்லாதவனாயின் அவனே நவீனரைக் கண்டதும் அடுக்களைக்கு ஓடி அடுக்குப்பானைகளுக்கிடையிற்போய்ப் பதுங்கிக் கொள்வான். அத்தடை அவனுக்கு மிகை. நெஞ்சுரம் படைத்த சைவாபிமானியையும் அத்தடை எதுவுஞ் செய்யாது. அவன் அதற் கடங்கான். தன் மனத்தில் தவறெனப்பட்ட தமிழர்ச்சனையை மக்கள் முன் அவன் எடுத்துக்கூறிக் கண்டிக்கவே செய்வான். நவீனர் அங்ஙனம் எதிர்ப்பாளருக்கு வாய்ப்பூட்டிட்டுவிட்டுத் '(தமிழ் அருச்சனை இயக்கத்திற்கு) ஆதரவு தமிழ் மக்களுடைய கருத்தில் மட்டும் இருந்தால் அது பயனில்லை... தீர்மானத்தில் வெளிப்படுத்த வேண்டும். தமிழ்நாட்டிலுள்ள தமிழர்களுடைய சங்கங்களெல்லாம் தமிழ் -அருச்சனை இயக்கத்தை ஆதரித்துப் பொதுக்கூட்டங்கள் கூட்டித், தீர்மானங்கள் நிறைவேற்றிப், பத்திரிகைகளுக்கும், அதிகாரிகளுக்கும் தெரியப் படுத்த வேண்டும்' (10-5-55 தமிழ்நாடு) என்று கூறித் தம்மவரைத் தாற்றுக்கோல் கொண்டடித்தாற்போல் இடித்துத், தூண்டுவது நியாயவாதமாகுமா? மக்கட் கூட்டத்தில் அவருக்குப்போல் எதிர்ப்பாளருக்கும் பேசவுரிமையுண்டு. அதைத் தடுக்க முயல்வது சர்வாதிகாரப் புத்தியேயாம். நவீனருக்கும் நேர்மையான வாதத்துக்குந் தூரம் அதிகம். வாயில் துணியைத்திணித்துக் காரியத்தைச் சாதித்துக்கொள்ளப் பார்ப்பான், கள்ளன். அவர் அவனையனுசரிக்கப்பார்க்கிறாரா? ஆனல் அவ்வளவுஏமாறிகளல்லர் அவரை யெதிர்ப்பவர்.

'நமக்குப் புரிகின்ற நமது உள்ளத்தைத் தொடுகின்ற நமது தாய்மொழியிலே வழிபாடு செய்வதுதான் மிகவும் பொருத்தம் என்று நன்றாக உணர்ந்தவர்கள் கூடக்கட்சி வேறுபாடு இயக்க வேறுபாடுகளுக்கு அஞ்சி அந்த உண்மையைப் பலரும் அறியும்படி எடுத்துக் கூறுதற்கு முன்வருவதில்லை' (24-4-56 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். தாய்மொழிதான் புரியும், உள்ளத்தைத் தொடும் என்பது அவர் கருத்து

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி புரட்டாசி-26

# குன்றக்குடியார் கொண்டதை விடார்?

சமயப் பயிருக்குத் தாய்க்களை யாக முளைத்தெழுந்து "தான் கெட்டதோடல்லாமல் சந்திர புட்கரணியையும் கெடுத்தான்' என்ற பழமொழிப்படி, அறிவுபெறுத இளம் உள்ளமுடையவர்களை ஏமாற்றி இழுத்து, நெறிவழுவி கிற்கச் செய்து வருகிறவர் ஈ-வே-ரா. இவரது பிள்ளையார் உடைப்பு இயக்கந்தான் குன்றக்குடியாரின் உள்ளீட்டை அப்போழுது அறியாதிருந்த மெய்யன்பர்களைத் தூண்டி, அருள்நெறித் திருக்கூட்டத்தை அமைக்கும்படி செய்தது.

ஏணியைக்கருவியாகக்கோண்டு மச்சிலேறுகின்றவர்களும் தோணியைத் துணையாகக்கோண்டு ஆற்றைக் கடக்கின்றவர்களும், அவ்வேறுதலும் கடத்தலும் முடிந்த பிறகு அவற்றைப் புறக்கணித்து ஒதுக்கிவிடமாட்டார்கள். குன்றக்குடியார் குழம்பில் சேர்க்கின்ற கருவேப்பிலைபோல ஆண்டிமுதல் அரசர் வரை அனைவரையும் பயன் படுத்திக்கோள்கிருரேயன்றி நின்று பிடிக்கின்றவர்களாக எவரையும் வைத்துக்கோள்ளவில்லை யென்பது வெட்டவெளிச்சமாகத்தேரிந்ததாகும்.

தாமொரு தனிப்பட்ட மனிதரில்லை யென்பதும் மடத்தை உடையவரேன்பதும் அவரறியாதனவல்ல. பேரும் புகழும் பெருவாழ்வும் (பேரியபட்டம்) வரும் வரை, சைவமடாலயங்களின் சம்பிரதாயங்களிற் சிறிதும் வழுவற நின்ற அவர் அவை வந்தபிறகு மனம்போன போக்கில் பேசியும் நடந்தும் வருகிறவராக மாறிவிட்டார்.

பொதுவாகச் சமயப் பணியும் சிறப்பாக ஈ-வே-ராவின்செயலுக்கு எதிர்ப்புப் பணியும் புரியத் தோன்றிய அருள்நெறித் திருக்கூட்டத்தின் நிரந்தரத் தலைவரென்று தம்மைப் பறைசாற்றிக்கொள்ளுகின்ற குன்றக்குடியார், திராவிடக் கழகக் கூட்டத்திற்குத் தேடிச் சென்று, ஈ-வே-ராவுக்குப் பொன்னுடை போர்த்தியதுமல்லாமல் அதுபற்றி அறிக்கை விடவும் துணிவு கொண்டுவிட்டாரென்றால் அது அவருடைய குறையன்று. பொதுவாக நம்முடைய குறையும் சிறப்பாக அருள்நெறித்திருக்கூட்ட உறுப்பினர் ஆதரவாளர்களின் குறையுமேயென்று வற்புறுத்திக் கூற விரும்புகின்றோம்.

அறிக்கையைப் படித்துப்பார்த்த நாம் அதுபற்றி வருத்தமோ ஆத்திரமோ அடையவில்லை. ஆனால் 'பூனை கண்ணை மூடிக்கொண்டு உலகம் அத்தமித்து விட்டது' என்று நினைப்பதுபோன்ற நினைவுடையவர்கள், இந்த இருபதாம் நூற்றாண்டிலும் இருக்கத்தானே செய்கிறார்கள் என்று இரக்கம் மட்டும் அடைகிறோம். கடவுள் இல்லை யென்று ஈ-வே-ரா சொல்லவில்லையாம். கடவுள்களைப்பற்றித் தான் அவரது எதிர்ப்பாம். எம் மார்க்கத்தாரோடும் இகழ் வற்று இருப்பதுவே, சன்மார்க்க நெறி கண்டீர்' என்று வள்ளலார் உபதேசித்திருக்கிறாராம். இவைபோல அவரது அறிக்கையில் பலவுள்ளன.

'கடவுள் ஒருவர்உண்டு' என்று பாலபாடம் சொல்லும் தமிழ்நாட்டில் 'கடவுள்கள் பலர் உள்ளார்கள்' என்று ஈ-வே-ரா துணிந்து சொல்லுகிறார். தலைவராகக் கர்த்தாவொருவரே இருக்கிற திருமடத்தில் சின்னப்பட்டம் பண்டாரசந்நிதிமுதல் மடங்கூட்டும் மாதர் வரை பலரை வைத்துக்கொண்டிருக்கிற குன்றக் குடியாருக்கு மடத்திலிருக்கும் அத்தனைபேரும் மடாதிபதியாகத் தோன்றுவதில்லை யல்லவா?

மார்க்கம் என்று இராமலிங்க சுவாமி குறிப்பதற்குக் குன்றக்குடியார் கொண்ட பொருள் உண்மையானால், ஈ-வே-ராவின்பிள்ளையார் உடைப்பு இயக்கமும் ஒரு மார்க்கந்தானே! அந்தமார்க்கத்தை அவர் அப்பொழுது என் எதிர்த்தாரென்பதுதான் நமக்கு விளங்கவில்லை.

மெய்த்தொண்டர்கள் பலரது சேவையை அருள்நெறித் திருக்கூட்டம் இன்று பெற்றிருக்கிறது. அத்திருத்தொண்டர்கள் இனி என்ன செய்யப்போகிறார்களென்பதைப் பொறுத்திருந்துபார்ப்போம்!

# விழிக்காமல் முடியுமா?

(கலைஅரசன்)

நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு என்று பாரதியார் கூறிச்சென்றது உலகம் அறிந்தசெய்திதான். அதை இந்த இடத்தில் அழுத்தமாககினைவில்வைத்துக்கொள்ள வேண்டும். மனிதர்கள் பிறந்தோம்-வாழ்ந்தோம்-இறந்தோம் என்று முடிந்தால் அவர்களை மனிதர்கள் என்று சொல்லமுடியாது. வாழ்வு வளமானதாக இருக்கவேண்டும். வையம் சிறக்கத்தக்க திட்டங்கள் தீட்டப்பெற வேண்டும். திறமையாகச் செயலாற்றவேண்டும் என்ற குறிக்கோளில் வாழ்ந்து வெற்றி காண்பவர்கள்தான் மேலான மனிதர்கள். அவர்கள்தான் பொதுமக்களின் உள்ளத்தில் அழியாத இடம் பெறுவார்கள்.

உண்பதும் உடுப்பதும் உறங்குவதும் அல்லாமல் ஒன்றும் அறியாதவர்களாய் நாள் தவறினாலும் மேற்கண்ட செயல்களில் தவறாதவர்களாய்த்தங்கள் வாழ்க்கையை வெற்றிகரமாக முடித்து வருகின்ற கூட்டத்தார் இற்றைநாளில் இல்லாமல்இல்லை. ஈ எறும்புமுதல்எல்லாப்பிராணிகளும் எளிமையாக நிரப்பிக்கொள்கின்ற வயிற்றை எப்படி எப்படியெல்லாமோ நிரப்பிக்கொள்ளக்கருதி அதற்காகச் செய்யத்தகாத செயல்கள் செய்கின்ற பெரிய மனிதர்களும் உண்டு. இவர்களைவயிறுகழுவுவதற்காகப் பொற்பினும் மிச்ச கற்பை விலைகூறித்திரியும் நாசகாரிகளுக்கு ஒப்பிடுவதைத்தவிர வேறு என்ன சொல்லமுடியும். இளமைக்குணத்தின் சாயலைக்கூடக் காணமுடியாத கிழவனாகவோ, தொழுநோய் கொண்ட விகாரியாகவோ இருந்தாலும் அதைப் பற்றிஇந்தநாசகாரிகளுக்குக் கவலையே இல்லை, அவர்களுக்கு வேண்டியதெல்லாம் பணம். பணத்திற்காகப் படுக்கையை விரிக்கும் பாத்தையர்களின் பரம்பரை அரசாங்கத்தாரால் சட்டப்படி ஒழிக்கப்பட்டு விட்டது. ஆனால் அந்தக் குணம் படைத்தவர்களின் பரம்பரை என்றுதான் ஒழியுமோ-தெரியவில்லை. அவர்களும் திருந்தி வாழ்வதைத்தவிர வேறு வழி

யில்லை என்று அறிவிக்கவிரும்பு கின்றேன்.

ஃ ஃ ஃ

'கருத்து வேறுபாடு இருக்கலாம் அது உலக இயற்கை. கருத்து வேறுபாட்டைக் கலகத்தில் கொண்டுபோய் முடித்து விடக்கூடாது. அப்படிச் செய்பவர்கள் தங்களது பிழைப்பிற்காகவே அவ்வாறு செய்கின்றுர்கள்' என்று பெரியவராக நடித்துக்கொண்டிருக்கின்ற ஒருவர் சிலநாட்களுக்கு முன்பு கூறியுள்ளார். இது அவரது கருத்தல்ல. பல பெருமக்களது கருத்துக்களைத் திருடித் தன் கருத்தாக அவர் வெளியிட்டது. இப்படிப் பெரிய மனிதர் என்ற போர்வைக்குள் புகுந்திருக்கும் அந்த வேடதாரி கூறியதால் அவரிடத்தில் இதயத்தைப் பறிகொடுத்தவர்கள் பலர். இன்று அந்த மர்ம மனிதர் போர்த்தியிருக்கின்ற போர்வை போலியானதென்று அறிந்து அவர்கள்எல்லாரும் தங்களதுஇதயத்தை இன்று இரும்பாக்கிக்கொண்டு விட்டார்கள். இன்னும் எத்தனை நிகழ்ச்சிகள் நிகழ்ந்தாலும் அந்தமர்மமனிதர் மட்டும் உலகத்தை ஏமாற்றுவதில் ஒரு அங்குலம் கூடத் தளர்ச்சி அடையமாட்டார். என்று தெரிகிறது

'சொல்லியவண்ணம் செய்பவர்கள் தாம் உயர்ந்தவர்' என்று ஊருக்கு உபதேசம் செய்துவிட்டுப் பேசிய பேச்சிற்கும் போட்ட வேஷத்திற்கும் மாறுபட்டு நடந்தால் அப்படிச் சொன்னவரை உலகம் விரைவில் ஒதுக்கித் தள்ளிவிடும். பாரத நாட்டுக்குள்ள இயற்கைகள் சிலவற்றில் ஒன்று வேஷத்திற்கு மதிப்புக்கொடுப்பது. வெள்ளை வேஷ்டிக்காரர் சொல்லைவிடக் காவி வேஷ்டிக்காரர்களின் சொல்லுக்கு இந்த நாட்டில் நிறைய மதிப்புண்டு. கொண்ட கோலத்திற்குப் புறம்பாகச் செல்லாது சைவ ஒழுக்கத்தில் தருமபுரம், திருவாவடுதுறை,மதுரை திருப்பனந்தாள்போன்ற மடாதிபதிகள் செயலாற்றி வருகின்றுர்கள். சைவத் துரோகம் செய்கின்றவரும் சைவ மடாதிபதியாக இருப்பது சைவத்தின் தவக்குறைவாகும்.

கருத்துமாறுபாடு உடையவருடன் தனித்துப்பேசி நல்ல முடிவைக் காணப் போகின்றேன் என்று ஒரு சைவத்துறவி சொல்கிறுர். கொழுத்த காளைமாட்டை அன்புசெய்து வசப்படுத்திக் கொஞ்சம் கொஞ்சமாகப் பால் கறக்கத் தொடங்கிவளம் பெற்ற பசுமாடாக்கப் போகிறேன்என்ப

வனுக்குள்ள புத்திசாலித்தனம் இந்தத் துறவிக்கும் இருக்கிற தல்லவா? விக்கிரகங்களையும், சாத்திரங்களையும் பேணிப் பெருமை தர வந்த மடாதிபதி அவற்றை உடைத்து- எரித்து- அழித்து ஊறுசெய்யும் ஒருவரைப் பன்னுடை போர்த்திப் பதக்கம் வழங்கிப் பாராட்டியது கேட்டு உலகம் சிரிக்கின்றதென்பதை அவருள்ளம் உண்மையாக அறியும்.

வேசி பணத்திற்காகப் பல்லைக் காட்டி நடப்பதற்கும், இவர் பத்திரிகைப் பெயருக்காகச் செயலைச் செய்வதற்கும் என்ன வித்தியாசம்?

மடாதிபதி மேடை ஏறிப் பேசுவது ஒருகாலத்தில் புதிதாக இருந்தது. 'பொதுமக்கள் மூக்கின் மேல் விரலை வைத்து உள்ளீடு தெரியாமல் கொண்டாடினார்கள்.' இன்று பெரியவர் முதல் சிறியவர்வரை எல்லாரும் அவரது கபடநாடகத்தைத் தெரிந்து கொண்டார்கள். வேடமும், ஸ்தானமும் அவருக்குக் கொடுத்த ஆணவம் அவர் திருந்துவதற்கு அவரை விடப் போவதில்லை. தவருன போக்குகள், மாறுபட்ட செய்கைகள் ஆகியவற்றிற்குக் காலப்போக்கில் தீர்வுகிடைக்காதுபோகாது. ஏமாறுகிறவர்கள் எப்பொழுதும் ஏமாறிக் கொண்டிருக்கமாட்டார்கள். சைவஉலகம் விழித்துச் சிலநாட்கள் ஆகிவிட்டன. அந்த விழிப்பு இன்னும் தூங்கிக் கொண்டிருக்கின்ற இளைஞர் உலகத்திற்கும் முற்போக்கு உலகத்திற்கும் வந்துதானே தீரும்!

---

(5பக்கத் தொடர்ச்சி)

இருவரையும் விட்டுப் பிரிந்து அன்புசெய்யத் தகாத பரத்தையரை நாடிய இழிவை உணர்த்தினர்.

'அன்புடைக் கணவர் அழிதகச் செய்யினும், பெண் பிறந்தோர்க்குப் பொறையே பெருமை' என்ற பெருங்கதையடிகளை இப்பாடலின் ஈற்றடியோடு ஒப்பிட்டுக் காணலாம். உயர்குடிப்பிறந்தவர் பிறர் தூற்றும் பழியைப் பொருட்படுத்தமாட்டார் என்பது, இப்பாடலில் திரண்டுகிடக்கின்ற கருத்தாயிருக்கின்றது.

---

## பாரதிவிழா

நேமத்தான்பட்டி அக் 1- இன்று மாலை திருநாவுக்கரசு வித்தியாசாலையில் அமரகவி சுப்பிரமணிய பாரதியாரின் விழா வித்தியாசாலை மானேஜர் உயர் திரு, பழ நா நாராயணன் செட்டியார் அ வ ர் க ள் தலைமையில் நடைபெற்றது. மாணவ மாணவிகளின்பாரதியாரைப் ப ற் றிய ஆடல், பாடல், பேச்சு மு த லி யன நடைபெற்றன.

தலைவர் அவர்கள் பாரதியாரின் பெருமைகளைப் பற்றி அழகுற எடுத்துக் கூ றி ஞ ர் க ள். இறுதியில் வி த் தி ய ா சாலைத் தலைமை ஆசிரியர் திரு கி ஆராவமுதன் அவர்களால் நன்றி நவிலப் பெற்று நாட்டுவாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது. கூட்ட முடிவில் அனைவருக்கும் இனிப்பு வழங்கப்பெற்றது

---

## சென்னைச் சட்டசபை

சென்னை அக் 5- நவம்பர் மு த ல் தேதியன்று மாகாணங்கள் திருத்தி அமைக்கப்பட இருக்கின்றன அல்லவா? அதையொட்டிப்புதிய சென்னைச் சட்டசபைக்குப் புதிய அவைத் தலைவர் ஒருவர் தேர்ந்தெடுக்கப் படுவர்.

மலபார், ஹோஸ் தூர்க், காசர் கோடு ஆ கி ய வட்டாரங்கள் கேரளத்துடன் நவம்பர் முதல் தேதியிலிருந்து சேர்ந்துவிடும். ஆ க வே தற்பொழுது மேற்குறிப்பிட்ட வ ட் டாரங்களின் பிரதிநிதிகளாகச் செ ன் னை ச் சட்டசபையில் இ ட ம் பெ ற் றுள்ள 30 உறுப்பினர்கள் நவம்பர் முதல்தேதியிலிருந்து புதிய கேரளச் சட்டசபையின் உறுப்பினர்களாகி விடுவார்கள். இந்த 30பேர்களில் சென்னைச் ச ட் ட சபை அவைத் தலைவராகிய திரு கோபாலமேனனும்ஒருவர். அது போன்ற சென்னை மேல் ச பை யில் இப்பொழுது கன்னட வட்டாரங்களின் பிரதிநிதிகளாயிருந்துவரும் 10பேர்கள் நவம்பர் 1ம் தே தி யி லி ருந்து மைசூர் சட்டசபை உ று ப் பினர்களாகி விடுவார்கள். இந்த 10பேர்களில் சென்னை சுகாதார அமைச்சராகிய திரு ஏ பி ஷெட்டியும் ஒருவர்.

---

# வரைந்த மடல்.

(மாறன்)

தம்பி! சீரழிந்துபோன உன் அண்ணன் எழுதும் முதல் கடிதமும் கடைசிக் கடிதமும் இதுவே!

உனக்கும்-ஏன்? நம்தாய்க்கும் கூட அவமானத்தை ஏற்படுத்திவிட்டுக் காதலே பெரிதென ஓடிவந்தேனே!....நான்கண்ட பலன் சாதல்தான். எங்களுடைய காதல் மலர்ந்து மணம் 'கமழவில்லை. காலையில் தோன்றி, மாலையில் மறையும் ஆதவனைப்போல் தோன்றி மறைந்துவிட்டது.

மறுநாள் திருமணம். ஒளி இழந்துகிடந்த வீட்டிற்குக் குடும்ப விளக்காகக் கமலா வரப்போகிருள் என்று அம்மா ஆனந்தத்தில் இருந்தாள். நீயோ; நமக்கு ஒரு அண்ணி வரப்போகின்ருள் என்று சந்தோஷமாக இருந்தாய். ஆனுல் நானே; காதலித்தவளுக்குத் துரோகம் செய்யக்கூடாது என்று, சொல்லிக்கொள்ளாமல் நடுஇரவே ஓடிவிட்டேன். அதற்கு நான்கண்ட பலன் இதுதான்.

நானும் லீலாவும் மறுநாள் சென்னை வந்து சேர்ந்தோம். லீலா, படமெடுத்தாடி என் வாழ்வைக் கொத்திச் சித்திரவதைசெய்த பாம்பு, என் வாழ்வின் எழில்மண்டபத்தைச் சுக்கல் சுக்கலாக உடைத்தெறிந்த விஷப்புயல். என்னடா? அண்ணனுக்குச் சித்தம்கலங்கிவிட்டதா? என்றுநினைப்பாய். சித்தம்கலங்கவில்லை தம்பி, இவை என் இதயத்தின் எதிரொலிகள், யாரை நான் பத்தரைமாற்றுப் பசும்பொன் மேனியாளே, தித்திக்கும் தேனமுதே, நீ இல்லாவிட்டால் என்வாழ்வு ஒன்றுக்கும் பிரயோசனம் இல்லாமல் இந்த உயிர் உடலைவிட்டுச் சென்றுவிடும் என்று சொல்லிஆசையையும், பாசத்தையும் சொரிந்தேனே அவள்தான் வஞ்சித்துவிட்டாள்.

அவளுடைய அன்பிலே நான் தலைநிமிர்ந்து நடக்கலாம் என்று நினைத்தேன். ஆனுல் அவளோ; தலைகுனியச் செய்துவிட்டாள். குளிர் நிலவு என்று கொதிக்கும் பாலைவனத்தில் இறங்கியது

போலாகிவிட்டது என் வாழ்வு. பூப்பறிக்கச் சென்றவன் கையிலே பூநாகம் கொத்தியது போல் என் கண்கள் என்னை ஏமாற்றிவிட்டன—ஏமாந்தேன்.

அவளுடைய அழகு மேனியும், நிலவைப் பழிக்கும்முகமும், கண்டாரை மயங்க வைக்கும் கண்களும்தான் எனக்குத் தெரிந்தனவே தவிர அவளுக்குப் பின்னால் ஆபத்து என்ற நான்கு எழுத்து மறைந்திருப்பது தெரியவில்லை.

அன்புக் காதலி பக்கத்திலே இருக்கின்றாள், இனி நமக்கு என்ன கவலை என்று இறுமாப்புடன் இருந்த என்னைத் தூக்கி எறிந்துவிட்டு விபரீதப் போக்கிலே போக ஆரம்பித்துவிட்டாள்.

என் உயிர் பிரிவதற்குள் என் உள்ளத்தின் குமுறல்களை—உனக்குக் கூறிவிட்டு நிம்மதியாக மடியவேண்டும் என்ற முடிவுக்கு வந்தபின்புதான் இந்தக் கடிதத்தை எழுதினேன். என் இதயம் வெந்து மடிவதைப் பற்றிக்கூட எனக்குக் கவலை இல்லை. கௌரவமாக வாழ்ந்த நம் குடும்பத்தில் களங்கத்தை ஏற்படுத்திவிட்டேனே என்று எண்ணும் போதுதான் என்னை ஆயிரம் ஈட்டிகளைக் கொண்டு குத்துவது போல் இருக்கிறது.

மணம் முடிந்த ஓராண்டுக் காலம் இன்பப் படகிலே சென்றோம். அந்தச் சமயத்தில்தான் எனக்கு வியாதி ஆரம்பமாகியது. சருமமெல்லாம் தடிப்புத் தடிப்பாக விழ ஆரம்பித்தது. டாக்டரிடம் காண்பித்தேன். ஐம்பது ரூபாயில் முடித்துவிடுகின்றேன் என்றவர் ஆயிரம் ரூபாய்வரை இழுத்துச் சென்றார். கொண்டுபோன பணம் பாகாக உருகியது. பணம்தான் செலவழிந்ததே தவிர வியாதி குணமாகவில்லை. இந்த நிலைமையில் குடும்பம் நடத்துவதே சிரமமாக இருந்தது. நான் பார்த்த வேலையை அவளுக்கு வாங்கிக் கொடுத்தேன். முதலில் வேலை காலிஇல்லை என்று சொன்னான் அந்த மானேஜர். லீலாவைப் பார்த்தவுடன் தனக்கு ஒரு உதவி மானேஜர் தேவை என்று சொல்லி வேலைக்கு மறுதினத்திலிருந்தே வரச்சொன்னான் அந்தக் காமவெறிபிடித்த கயவன்.

வேலைக்குச் சென்றதுமுதல் அவள் என்னை மதிக்காமல் நடந்தாள். எனக்கு வேலை ஆறு மணிக்கெல்லாம் முடிந்துவிடும். ஆனால் லீலாவோ இரவு பத்து மணிக்குத்தான் வருவாள்.

'என் இவ்வளவு நேரம் என்று ஆசையுடன் கேட்பேன்' ஆனால் அவளோ, இங்கு என்ன சுகத்தைக்கண்டேன். ஆபீஸ்முடிந்ததும் மானேஜர் கூப்பிட்டார், சினிமாவுக்குச்சென்றேன்என்று இறுமாப்புடன் பதில் அளிப்பாள்.

அன்றொருநாள்; அவள் கட்டிலில் உட்கார்ந்தபடியே தூங்கிவிட்டாள். அருகில் உட்கார்ந்து அவளுடைய செவ்வாய் இதழிலே முத்தமிடலாம் என்று என் உதட்டை அவளுடைய முகத்திற்கு நேரே கொண்டு செல்லும்போது விழித்துக் கொண்டாள். அவள் கண்கள் எரிமலையாயின. 'குஷ்டரோகம் பிடித்தவர்களுக்கு ஆசைவேறு வந்துவிட்டதாக்கும்' என்று கர்ஜித்தாள். அவள் சொன்ன அந்த வார்த்தை என் வாழ்க்கைப் பயணத்தின் எல்லையை முடிக்க உதவியாகிவிட்டது. தம்பி! நான் தீராத நோய்பிடித்தவனாக இருந்தாலும் எனக்கும் மற்றவர்களைப்போல் உணர்ச்சி இருக்கத்தானே செய்யும். அன்று இரவே வீட்டைவிட்டுக் கிளம்பியவன்தான் இன்றுவரை வாழ்க்கைக்கு முடிவுதேடாமல் அலைந்து கொண்டிருக்கின்றேன். தம்பி! இந்தக் கடிதத்தைப் படித்துவிட்டுக் கிழித்துப் போட்டுவிடு, இல்லாவிட்டால் தீயின் தாபத்திற்கு இரையாக்கிவிடு. இது எப்படிக் கசங்கிக் கருகிப்போகிறதோ அதைப் போல்தான் என்னுடைய வாழ்வும் கருகிய மலராகிவிட்டது.

---

## டெலிபோன் நிலயங்கள்

சென்னை, அக்டோபர்-6

காரைக்குடி டெலிபோன் எக்ஸ்சேஞ்சுடன் இணைக்கப்பட்டுள்ள பொது டெலிபோன் நிலயமொன்று பொன்னமராவதியில் செப்டெம்பர் 30-ந் தேதியன்றும், மாயவரம் டெலிபோன்எக்ஸ்சேஞ்சுடன் இணைக்கப்பட்டுள்ள பொது டெலிபோன் நிலயமொன்று பேரளத்தில் செப்டெம்பர் 26-ந் தேதியன்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.